# கல்கி

## பொருளடக்கம்


| | | |
|---|---|---|
| மலர் 6<br>இதழ் 5 | 1946 செப்டம்பர் 1 | வியய<br>ஆவணி 16 |




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.

வாய்ச்சொல் வீரர் அல்ல; மௌனத் தொண்டு செய்யும் கர்மவீரர். பார்ப்பதற்குப் பரம சாது; நெஞ்சிலே இணையில்லாத துணிவு படைத்தவர். படாடோபமாகத் தேச பக்தியைப் பறைசாற்றுபவர்; ஆனால் சமயம் வரும்போது தியாகத் தீயில் குதிக்கப் பின் வாங்காதவர். 1942-ல் சிறைப்பட்டு $2\frac{1}{2}$ வருஷம் சிறைவாசம் செய்த ஆகஸ்டு தியாகி; ஆனால் ஆகஸ்டு—வாதி அல்ல. இத்தகைய உயர்ந்த குணங்களும், சிறந்த பண்பாடும் உடைய ஸ்ரீ வி. பெருமாள்சாமி ரெட்டியார் எம். எல். ஸி. அவர்கள் இந்தக் "கல்கி" இதழின் அட்டையைச் சிறப்பிக்கிறார்.




இந்த வாரத்து இதழில் ஸ்ரீ ரெட்டியாரின் படத்தை வெளியிடுவதற்கு ஒரு சிறந்த பொருத்தம் இருக்கிறது.

ராஜாஜியின் தலைமையிலும் திறமையிலும் தேச முன்னேற்றத்துக்கு அவர் காட்டும் மார்க்கத்திலும் பூரண நம்பிக்கை படைத்தவர் ஸ்ரீ பெருமாள்சாமி ரெட்டியார். சென்ற வருஷத்தில் தமிழகத்தில் ராஜாஜி சம்பந்தமாக நடந்த தீவிர வாதப் பிரதிவாதங்கள் எல்லாம் அவருடைய நம்பிக்கையை அணுவளவும் அசைக்கவில்லை. "ராஜாஜியின் சேவை தமிழ் நாட்டுக்கும் தேசத்துக்கும் இன்றியமையாதது" என்ற உறுதியில் அவர் சிறிதும் பிறழவில்லை. இந்த நோக்கத்துடனே தமிழ் நாட்டில் நடந்த முயற்சிகளில் எல்லாம் ஸ்ரீ பெருமாள்சாமி ரெட்டியார் முதன்மையாக நின்று மிகவும் முக்கியமான பங்கு எடுத்துக் கொண்டார்.

இப்போது அவருடைய நம்பிக்கை பலிதமாகி அவருடைய முயற்சி பெரும் வெற்றி யடைந்திருக்கிறது. இந்திய தேசிய சர்க்காரில் ராஜாஜி இடம் பெற்றது, முதன்மையாக ஸ்ரீ ரெட்டியாரின் வெற்றி என்றே சொல்லவேண்டும்.

சுமார் இருபத்தைந்து வருஷ காலமாக ஸ்ரீ பெருமாள் சாமி ரெட்டியார் தேசத் தொண்டில் ஈடுபட்டிருப்பவர். காங்கிரஸ் ஸ்தாபனங்களில் பல பொறுப்புள்ள பதவிகளை வகித்தவர். வட ஆற்காடு ஜில்லா போர்டு தலைவரா யிருந்தபோது அவருடைய திறமையான நிர்வாகம் பெரிதும் புகழுக்குரியதா யிருந்தது.

இந்தியாவின் வருங்கால வாழ்வையே உருவாக்கப் போகும் அரசியல் நிர்ணய சபைக்குச் சென்னை மாகாணம் தேர்ந்தெடுத்திருக்கும் நாற்பத்தொன்பது அங்கத்தினரில் ஸ்ரீ ரெட்டியாரும் ஒருவர். அவருடைய நிர்மாண சேவைத் திறமையை வருங்காலத்தில் தமிழ்நாடு இன்னும் சிறப்பாகப் பயன்படுத்திக் கொள்ளுமென்று எதிர்பார்க்கலாம்.

..முன்னமேயே
# லைப்பாய்
பழக்கத்தையும் அவன்
அறிந்திருக்கிறான்!



விளையாட்டுக் கருவிகளின் மூலம், அவன் மனதிற் இசைந்தாற்போல கைகளை உபயோகிக்கும் பழக்கத்தை யடைகிறான். விளையாடும் பொழுதும், தன் வீட்டிலும் விளையாட்டுக் கருவிகளிலுங்கூட மறைந்திருக்கிற அழுக்கு அபாயத்திலிருந்து தினசரி லைப்பாய் சோப்பின் உபயோகத்தினால் காப்பாற்றிக் கொள்கிற அந்த பழக்கம், மகனைக் காப்பாற்றுகிற தென்பதை தாயார் கவனித்து வருகிறாள்.




*லைப்பாய் ஒரு நல்ல சோப்பைக் காட்டிலும் சிறந்தது.*

*அது ஒரு நல்ல பழக்கம்.*

L. 80-23 TM

LEVER BROTHERS (INDIA) LIMITED




மலர் 6 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 5

# என்ன சேதி?

## பஞ்சப் படுகொலை

இருபத்தைந்து வருஷத்துக்கு முன்னால் நடந்த 'பஞ்சாப் படுகொலை'யைப் பற்றி யல்ல; இந்த வருஷத்திய 'பஞ்சப் படுகொலை'யைப் பற்றித்தான் சொல்லுகிறோம். காந்தி மகான் சென்ற இதழ் 'ஹரிஜன்' பத்திரிகையில் எழுதி யிருப்பதைத்தான் குறிப்பிடுகிறோம். "மைசூருக்கும் ராயல சீமைக்கும் ஏராளமாகத் தானியங்கள் வந்து இறக்குமதியாகா விட்டால் நவம்பர், டிசம்பரில் ஜனங்கள் பெருந் திரளாகச் சாவார்கள்" என்று ஒரு நிருபர் மகாத்மா காந்திக்கு எழுதியிருந்தாராம். "அப்படி நேர்ந்ததென்றால், அது அந்தந்த சர்க்கார்கள் செய்த பெருந் திரளான படுகொலையாகும்" என்று மகாத்மா காந்தி அபிப்பிராயம் தெரிவித்திருக்கிறார்.

அதோடு, அயல் நாடுகளிலிருந்து தானிய இறக்குமதியை எதிர்பார்க்கும் மடமையைப் பலமாகக் கண்டித்து, 'இந்த நாட்டில் நிலவளம் இல்லையா? நீர்வளமில்லையா? மனசு வைத்து முயன்றால் டிசம்பருக்குள் வேண்டிய தானியம் உற்பத்திசெய்ய முடியாதா?" என்றும் காந்தி மகான் கேட்டிருக்கிறார்.

## முக்காலும் உண்மை

மைசூரின் நிலைமை நமக்குத் தெரியாது. ஆனால் சென்னை மாகாணத்தைப் பொறுத்த வரையில் மகாத்மாவின் கூற்று "உண்மை, உண்மை, முக்காலும் உண்மை" என்று நாம் உறுதிகூற முடியும். ராயலசீமை என்பது கடப்பை கர்நூல் முதலிய சென்னை மாகாணத்தைச் சேர்ந்த ஜில்லாக்கள்தான். ராயல சீமையைக் குறித்து ஒரு நிருபர் மகாத்மாவுக்கு எழுதிய அதே விஷயத்தைச் சென்னை மாகாணத்தைப் பற்றிப் பொதுப் படையாகப் பிரதம மந்திரி பிரகாசம்காரு சட்டசபையில் கூறியதை நேயர்கள் அறிவார்கள். அப்படி நேரும் பட்டினிச் சாவுகளின் பொறுப்பை மத்திய சர்க்கார்மீது போடுவதற்கு அவர் முயன்றதையும் அறிவார்கள்.

## விளங்காத மர்மம்

உண்மையில் இத்தகைய பஞ்சப் பேச்சு,—ஜனங்கள் மனதில் பீதி யுண்டாக்கும் பேச்சு,— நமக்கு விளங்காத மர்மமாகவே இருக்கிறது. கப்பலில் வந்து தானியம் இறங்காவிட்டால் சென்னை மாகாண ஜனங்கள் உணவின்றி ஏன் சாக வேண்டும் என்பது அறிய முடியாத அதிசயமா யிருக்கிறது.

ஒரு சின்னக் கணக்கு — பொதுப்படையான கணக்கு—பார்த்து வைப்போம்.

இந்தியா தேசத்தில் ஒவ்வொருவருக்கும் சராசரி 20 அவுன்ஸ் தானியம் கிடைத்தால் முழு உணவாகும் என்று மதிப்பிட்டிருக்கிறார்கள்.

தானிய நெருக்கடியை முன்னிட்டு 16 அவுன்ஸ் ரேஷன் ஏற்படுத்தினார்கள்.

அந்தப் பதினாறு அவுன்ஸ் ரேஷன் அரிசி குறைந்து குறைந்து தேய்ந்து 8 அவுன்ஸ் அரிசி ஆகி யிருக்கிறது!

ஆகவே, ஒருவருக்கு 8 அவுன்ஸ் அரிசி கிடைத்தால், அது சாதாரணமாக வேண்டிய அளவுக்குக் காலே அரைக் கால் பங்குதான்.

இந்தச் சென்னை மாகாணத்திலுள்ள மக்களுக்குச் சாதாரணமாக வேண்டிய அரிசியில் காலே அரைக்கால் பங்குகூட இந்த மாகாணத்தில் விளைய வில்லையா என்று கேட்கிறோம்.

விளைய வில்லை என்று சொல்வது சுத்த மடமையைத் தவிர வேறில்லை.

சென்னை மாகாணத்து ஜனங்களுக்கு வேண்டிய தானியத்தில் குறைந்தபட்சம் முக்கால் பங்கு தானியம் இந்த மாகாணத்தில் விளையத்தான் செய்கிறது.

கோதாவரி, கிருஷ்ணா, வடபெண்ணை தென்பெண்ணை, காவேரி, வைகை, தாமிரபரணி ஆகிய நதிகளும், பிரம்மாண்டமான ஏரிகளும் இந்த மாகாணத்தில் இருக்கின்றன, தாராளமாக

மழை பெய்கிறது. ஏராளமான நீர் நிலங்கள் இருக்கின்றன. தோண்டிய இடமெல்லாம் தண்ணீர் சுரக்கிறது.

இப்பேர்ப்பட்ட வளமுள்ள மாகாணத்தில் ஜனங்களுக்கு வேண்டிய தானியம் முழுவதையும் நிச்சயமாக விளைவித்துக் கொள்ளலாம்.

அன்னிய நாட்டிலிருந்து தானியம் வர வேண்டிய அவசியமில்லை. அதற்காகக் கொள்ளை கொள்ளையாகப் பணத்தைக் கொட்டிக் கொடுக்க வேண்டியதில்லை. இவ்விதம் இறக்குமதி யாகும் தானிய வியாபாரத்தில் இடை நடுவிலே நாலு கால் எலிகளும் இரண்டு கால் எலிகளும் ஏராளமாகக் கபளீகரம் செய்ய வேண்டிய அவசியமுமில்லை.

இந்த மாகாணத்தில் ஜனங்கள் பஞ்சத்தில் சாவார்கள் என்று சொன்னால், ஒன்று அது பின்னை பிடிக்கும் முட்டாள் வதந்தியைப் போன்ற வெறும் பூச்சாண்டிப் பேச்சாயிருக்க வேண்டும்; அல்லது விளையும் தானியம் எங்கேயோ கள்ள மார்க்கெட்டில் கபளீகரம் ஆகிக் கொண்டிருக்கிறது.—அதைத் தடுக்க இந்தக் கவர்ன்மெண்டுக்குக் கையினாலாக வில்லை யென்றுதான் ஏற்படும்.

"நெல்லுக் காய்ச்சி மரம் எப்படியிருக்கும்?" என்றும், "சோளக் கொடியின் தலையிலே தானியம் காய்க்கிறதா வேரிலே காய்க்கிறதா?" என்றும் கேட்கக் கூடியவர்கள் அரசாங்கத்தை நிர்வாகம் செய்தால் சென்னை மாகாணம் பஞ்சபீதியிலிருந்து விடுதலை பெறுவது கஷ்டமான காரியந்தான்.

## சோராதீர்கள்!

இந்தப் பக்கத்தின் அடியில் உள்ள விளம்பரத்தைத் துண்டுப் பிரசுரமாக அச்சிட்டு மாயவரம் ஆசிரியர் சங்கத்தார் விநியோகித்து வருகிறார்கள். நமக்கும் ஒரு பிரதி அனுப்பி வைத்திருக்கிறார்கள். எல்லாரும் அவரவர்களின் உத்தியோகத்தைப் பற்றிப் பெருமையாகச் சொல்லிக் கொள்வதுதான் இயற்கை. பாட புத்தகங்களில் "வண்ணான்" என்ற வார்த்தையை உபயோகிக்கக் கூடாதென்றும், "சலவைத் தொழிலாளி" என்று குறிப்பிட வேண்டுமென்றும் அந்தத் தொழில் செய்வோர் கிளர்ச்சி செய்கிறார்கள். இந்த மனித இயற்கைக்கு மாறாகப் பள்ளிக்கூட ஆசிரியர்கள் தங்கள் தொழிலைத் தாழ்த்திக் கொண்டு அதில் ஒருவரும் "சேர்ந்து விடாதீர்கள்" என்று பிரசாரம் செய்ய வேண்டுமென்றால், இதிலிருந்தே அவர்களுடைய மனம் எவ்வளவு புண்ணாகியிருக்க வேண்டுமென்று தெரிந்து கொள்ளலாம். இத்தகைய மனப் புண்ணுடன் அவர்கள் குழந்தைகளுக்கு என்ன பாடம் சொல்லிக் கொடுக்க முடியும் என்பதையும் கவனிக்க வேண்டும். அதாவது, நமது காங்கிரஸ் மந்திரிகள்,—முக்கியமாகக் கல்வி மந்திரி அவர்கள்—கவனிக்க வேண்டும்.

## ஆதரிக்கிறோம்!

சென்னைச் சட்டசபையின் பட்ஜெட் கூட்டத்தில் பிரதம மந்திரி கனம் பிரகாசம் பல விஷயங்களைப் பற்றிப் பேசியிருக்கிறார். அவற்றில் ஒரு விஷயத்தை நாம் நிபந்தனையின்றி மனப் பூர்வமாக ஆதரிக்கிறோம். "இப்போது காட்டப்படும் ஸினிமாக் காட்சிகள் பெ[illegible]வற்றை நான் பார்த்திருக்கிறேன். அவை மகா ஆபாசமானவை. நாகரிகமுள்ள மனிதர்கள் பார்க்கத் தகாதவை" என்று சொல்லியிருக்கிறார். இது முற்றும் உண்மையான விஷயம் என்று அறிவுள்ளவர்கள் எல்லாரும் ஒப்புக் கொள்வார்கள். ஆனால் இந்த நிலைமையைச் சீர்திருத்த கனம் பிரதம மந்திரி ஏதேனும் நடவடிக்கை எடுத்துக் கொள்ளப் போகிறாரா என்பது கேள்வி. மக்களை மிருகப் பிராயமாக்கி, ஸ்திரீகளின் பரிசுத்த உள்ளங்களை மாசுபடுத்தி, பால் மணம் மாறாத பாலகர்களுக்கு அளவற்ற தீமையை விளைவிக்கும் ஸினிமாக் காட்சிகளைச் சீர்திருத்தம் செய்யும் ஒரு காரியத்தைக் கனம் பிரகாசம்காரு திறம்படச் செய்வாரானால் அதற்காக அவரை மனமார வாயார வாழ்த்தித் தென்னாட்டு மக்களுக்கு அரிய தொண்டு செய்தவர் என்று பாராட்டச் சித்தமாயிருக்கிறோம்.

---

**வறுமையில் ஆழ்த்தி வாட்டி வதைப்பது;**

**உயிருக்கே உலைவைப்பது; எது?**

# ஆசிரியத் தொழிலே!

இளைஞர்களே! ஏமாறாதீர்கள்!!

ஆசிரியத் தொழிலுக்கு

ஆளாகாதீர்கள்!!!

மானிட வாழ்க்கைக்கே மாபெரு கஷ்டம்.

ஆசிரியர் சங்கத்தார்.

# நிகழ்ச்சிச் சித்திரம்


















-உ ர்மன்

யாருடைய சினேகம் வேண்டும்?

அராஜகம்

தேச
க்ஷேமம்

பஞ்சத்துக்கு நோட்டீஸ்
மகா-ரா-ரா-ஸ்ரீ
பஞ்சம் அவர்களுக்கு,
உன்னைச் சமாளிக்க
நம்மால் முடியாது.
இந்திய சர்க்காரிடம் போ!
— சென்னை
மந்திரி சபை

பஞ்சம்

பஞ்சத்தினால் செத்துப் போகிறவர்களுக்கு இந்திய சர்க்காரே பொறுப்பாளி என்று பிரகாசம்காரு கூறுகிறார்.

# உலகத்துக்கொரு புதுமை!

உமாதேவி சகிதமாக ரிஷப வாகனத்தில் ஏறி ஸ்ரீ பரமசிவன் வந்தார். மகாவிஷ்ணுவும் பிரம்மாவும் வந்தார்கள். கலைமகளும் திருமகளும் வந்தார்கள். விநாயகரும் சுப்பிரமணியரும் இந்திரனும் சந்திரனும் விரைந்து வந்தார்கள்.

தேவர்கள் மட்டுந்தானா? இல்லை! இந்தப் புண்ணிய பூமியில் வாழ்ந்திருந்து வானுலகடைந்த பெரியோர்கள் பலரும் வந்தார்கள். பாரத கண்டத்தையெல்லாம் முதன் முதலாக ஒரு குடை நிழலில் ஆண்ட பரத சக்கரவர்த்தி விஜயம் செய்தார். இரத்த வெள்ளம் ஓடிய யுத்த களத்தில் அஹிம்சா தர்ம விரதம் பூண்ட சம்ராட் அசோகர் வந்தார். சந்திரகுப்தனும் விக்கிரமாதித்யனும் அக்பரும் சிவாஜியும் கை கோத்துக் கொண்டு வந்து சேர்ந்தார்கள்.

பிறகு, இந்த நாளிலே வாழ்ந்த தேச பக்த வீர சிம்மங்களான தாதாபாய் நௌரோஜி, சுரேந்திரநாத பானர்ஜி, லாலா லஜபதிராய், கோபால கிருஷ்ண கோகலே, பாலகங்காதர திலகர், மோதிலால் நேரு, தேசபந்து தாஸ் முதலியோர் வந்தார்கள்.

எல்லாரையும் முந்திக் கொண்டு முன்னால் வந்த பாரதியார், இடி முழக்கத்தை யொத்த வீரகர்ஜனைக் குரலில்,

"ஒப்பிலாத சமுதாயம்
உலகத்துக் கொரு புதுமை!"

என்று பாடினார். அவரைப் பின்பற்றி ஏனையோர் அனைவரும்,

"—ஆம் ஆம்
ஒப்பிலாத சமுதாயம்
உலகத்துக் கொரு புதுமை!"

என்று பாடி முழங்கினார்கள்.

"இந்தப் பாரத தேசத்தை நான் ஆண்ட காலத்துக்குப் பிறகு இன்றைக்குத்தான் முதன் முதலில் இமய மலையிலிருந்து குமரி முனை வரையில் பாரத சாம்ராஜ்யம் ஏற்பட்டிருக்கிறது!" என்றார் சிங்கத்துடன் விளையாடிய சகுந்தலை புதல்வர்.

"என்னுடைய காலத்துக்குப் பிறகு இன்றைக்குத்தான் பாரத தேசத்தில் அஹிம்சா தர்மத்தின் பெருமை நிலைநாட்டப்பட் டிருக்கிறது!" என்றார் அசோக சக்கரவர்த்தி.

"என்னுடைய மனோ ராஜ்யம் உண்மையான பாரத சாம்ராஜ்யமாகி விட்டதே!" என்றார் சிவாஜி.

"என்னுடைய கனவு நனவாகி விட்டதே!" என்றார் திலகர்.

"என்னுடைய கவி வாக்குப் பலித்து விட்டதே!" என்றார் பாரதியார்.

"என்னுடைய சிஷ்யர் என்று சொல்லிக்கொண்ட மகாத்மா காந்தியின் தவ வலிமையினால்தானே இந்த அற்புதம் ஏற்பட்டது?" என்று மார் தட்டிக் கூறினார் கோகலே.

"என்னால் முடியாததை என் குமாரன் சாதித்து விட்டானே?" என்று மோதிலால் நேரு தோள்கள் பூரிக்கக் கூறினார்.

இப்படியெல்லாம் பேசிக்கொண்டு தேவலோகத்தவரும் பாரத நாட்டுப் பெரியவர்களும் அவரவர்கள் கூடையிலே கொண்டு வந்திருந்த புஷ்பங்களைக் கவிழ்த்தார்கள்.

அப்போது பூலோகத்தில் பூமழை பொழிந்தது.

தேவ துந்துபிகளுடன் சேர்ந்து, "ஜய விஜயீ பவ!" என்ற கோஷமும் எழுந்தது.

அவற்றின் இடையே "ஜெ ஹிந்த்!" என்ற வீர முழக்கத்தைக் கேட்டு எல்லாரும் திரும்பிப் பார்க்கவே நேதாஜி சுபாஷ் போஸ் விரைந்து வருவதைக் கண்டார்கள். "ஏன் இங்கே நிற்கிறீர்கள்? டில்லி சலோ! ஜல்தி சலோ!" என்றார் நேதாஜி.

* * *

வருகிற செப்டம்பர் மீ 2உ பாரத தேசத்தில் ஏற்படப் போகிற தேசீய சுதந்திர அரசாங்கம் "உலகத்துக் கொரு புதுமை!" என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

ஆயிரம் வருஷமாக அன்னியர் படையெடுப்புக்கும் அன்னிய ராஜ்ய பாரத்துக்கும் பழக்கப்பட்ட மக்கள்,

நூற்றைம்பது வருஷத்துக்கு மேலாக ஆங்கிலேயரின் இரும்பை யொத்த கெட்டியான ஆட்சியின் கீழ்க் கட்டுப் பட்டுக் கிடந்த மக்கள், சாதி சமயப் பிரிவினைகளும் பாஷை வேற்றுமை இன வேற்றுமைகளும் எவ்வளவோ உள்ள நாற்பது கோடி மக்கள், இவ்வளவு சொற்ப தியாகத்துடன், இவ்வளவு சுலபமாகப் பூரண சுதந்திரம் பெற்றனர் என்பது உலக சரித்திரம் கண்டிராத அற்புதமே யாகும்.

• • •

மேலே கூறிய மகா அற்புதம்,—உயிர்ச் சேதமோ பொருட் சேதமோ எதுவுமின்றி நாற்பது கோடி மக்களின் சுதந்திர சர்க்கார் ஏற்படப் போகும் அதிசயம்,—ஒரு தனி மனிதர் இருபத்தைந்து வருஷத்துக்கு முன்பு தூவிய வித்தின் பலன் தான் என்பதில் ஐயமில்லை.

மகாத்மா காந்தி ஊன்றிய அஹிம்சா தர்ம விதையிலிருந்து மரம் முளைத்து வளர்ந்து இப்போது கனியும் அளித்திருக்கிறது.

"இந்த அஹிம்சா மரத்தினால் என்ன பிரயோசனம்? இன்னும் பழம் பழுக்க வில்லையே!" என்று சிலர் ஆத்திரப் பட்டார்கள். அந்த மரத்தின் வேரைக் கிளறிச் சிலர் வெந்நீரை விட்டார்கள். சிலர் மரத்தை அடியோடு வெட்டி எறிந்து விடவும் முயன்றார்கள்.

நல்ல வேளையாக அவர்களுடைய குறுகிய நோக்கங்கள் கொண்ட முயற்சி எதுவும் பலிக்கவில்லை.

எனவே, இந்த வெற்றி மகாத்மா காந்தியின் அஹிம்சா தர்மத்துக்கு முதன்மையான வெற்றியாகும்.

அடுத்தபடியாக, நமது மாபெரும் தலைவர்கள் தேச சரித்திரத்தின் இந்த மிக முக்கியமான சந்தர்ப்பத்தில் ஆழ்ந்த முன்யோசனையுடனும் தீர்க்க தரிசனத்துடனும் காரியம் செய்திருப்பதைக் குறிப்பிட வேண்டும். இணையற்ற இராஜ தந்திரத்தை அவர்கள் கையாண்டு தேசத்தில் சுதந்திர சர்க்காரை ஏற்படுத்தியிருக்கிறார்கள். இது விஷயத்தில் நமது சென்னை மாகாணத் தலைவர் ராஜாஜி செய்துள்ள அரும் பெரும் தொண்டு தேசம் அறிந்ததாகும். டில்லியில் பிரிட்டிஷ் தூது கோஷ்டியின் முயற்சி கடைசி கட்டத்துக்கு வந்திருந்தபோது, "எல்லாம் நிஷ்பலனாகி விடும் போலிருக்கிறது. நீங்கள் வந்துதான் நிலைமையைச் சீர் செய்ய வேண்டும்" என்று இந்தியா மந்திரி லார்ட் பெத்திக் லாரன்ஸும் ஸர் ஸ்டாபோர்டு கிரிப்ஸும் ராஜாஜிக்கு எழுதினார்கள். அப்போது காங்கிரஸ் தலைவரா யிருந்த மௌலானா ஆஸாதும் ராஜாஜியை உடனே புறப்பட்டு வரும்படி தந்தி கொடுத்திருந்தார். அந்த அழைப்புகளை ஒப்புக் கொண்டு ராஜாஜியும் சென்றார். அடியோடு உடைந்து போவதற்கிருந்த தயிர்ப் பானை தப்பிப் பிழைத்தது. சுதந்திர வெண்ணெயும் திரண்டு வந்தது.

"பிரிட்டிஷ் மந்திரிகளின் நீண்ட கால திட்டத்தைப் பூரணமாக ஒப்புக் கொண்டு இடைக்கால திட்டத்தை மட்டும் நிராகரிப்பது" என்று காரியக் கமிட்டி அப்போது செய்த தீர்மானம் இந்தியாவின் சரித்திரத்திலேயே ஒரு புதிய சகாப்தத்தை உண்டாக்கியது. அந்தத் தீர்மானத்தை உருப்படுத்துவதற்கு முக்கிய காரண புருஷர்களா யிருந்தவர்கள் ஸ்ரீ வல்லபாய் படேலும் ராஜாஜியுமே யாவார்கள். அவ்விதம் செய்திராமல், சில அதிதீவிர தேசபக்தர்களின் யோசனைப்படி நீண்டகாலத் திட்டத்தையும் காங்கிரஸ் நிராகரித்திருந்தால் இப்போது தேசத்தில் என்ன நிலைமை ஏற்பட்டிருக்கும் என்பதை நேயர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும். ஏன்?—ஜனாப் ஜின்னாவின் தனிப் போராட்டிதான் அகில இந்தியாவிலும் தற்சமயம் நடந்து கொண்டிருக்கும். அந்தத் தனிப் போராட்டியில் எத்தனை கல்கத்தா சம்பவங்கள் நடந்திருக்குமோ கடவுளுக்குத்தான் தெரியும்.

அத்தகைய மாபெரும் விபத்து தேசத்துக்கு நேராமல் போனதும், நாளது செப்டம்பர் மீ 2உ தியாக மூர்த்திகளான நமது தேசத் தலைவர்கள் இந்தியாவின் ஆட்சியை ஏற்றுக்கொள்ளப் போவதும் இந்தப் பாரத பூமியில் பிறந்த எண்ணற்ற பெரியோர்களின் புண்ணியத்தினாலே தான் என்று சொல்ல வேண்டும். அத்தகைய நல்ல முடிவு ஏற்படுவதற்கு நமது தலைவர் ராஜாஜி பெரிதும் காரணமா யிருந்தார் என்பது குறித்துப் பெருமையுடன் தலை நிமிர்ந்து நடக்க நமக்கு உரிமை உண்டு.

• • •

புதிய தேசிய சுதந்திர சர்க்கார் ஏற்படுவதில் நமக்கு ஏற்படும் எல்லை

...ற்ற குதூகலத்துக்கு ஓரளவு களங்கம் உண்டாக்கும் அம்சம், அதில் முஸ்லிம் லீக் சேரவில்லை என்பதாகும். ஆனால் இதற்குக் காரணமான தவறு காங்கிரஸ் தலைவர்களுடையதல்ல. முஸ்லிம் லீக்கின் ஒத்துழைப்பைப் பெறுவதற்கு நமது தலைவர்கள் செய்யாத பிரயத்தனங்கள் பாக்கியில்லை. பிரிட்டிஷ் மந்திரிகளும் வைஸ்ராய் அவர்களும் முஸ்லிம் லீக் தலைவர்களை எவ்வளவோ தாஜா செய்து பார்த்தது தேசம் அறிந்த விஷயம். அதற்காக எத்தனையோ தடவை தேசிய சர்க்கார் அமைப்பை ஒத்திப் போட்டுக் கொண்டு வந்தார்கள். கடைசியாக பிரிட்டிஷாரே முஸ்லிம் லீக் தலைவர்களின் கோரிக்கை எவ்வளவு நியாயமற்றது என்று கண்டுகொண்டு காங்கிரஸ் அக்கிராசனரைத் தேசிய சர்க்கார் அமைக்கும்படி அழைத்தார்கள்.

வைஸ்ராய் வேவல் தேசிய சர்க்கார் அமைப்பைக் குறித்துச் செய்த ரேடியோ பிரசங்கத்தில் முழுக்க முழுக்க முஸ்லிம் லீக்கைச் சமரசப்படுத்தும் தோரணையிலேயே பேசியிருக்கிறார். இடைக்கால சர்க்காரில் ஐந்து ஸ்தானங்கள் எப்போதும் அவர்களுக்காகக் காத்திருக்கின்றன என்று உறுதி கூறியிருக்கிறார்.

எனவே, செப்டம்பர் 2உ ஏற்படப் போகும் சுதந்திர தேசிய சர்க்காரில் முஸ்லிம் லீக் தலைவர்கள் இல்லையென்றால், அதன் பொறுப்பு காங்கிரஸ் தலைவர்களைச் சாராது; பிரிட்டிஷாரையும் சாராது; முஸ்லிம் லீக் தலைவர்களையே சாரும்.

எனவே, கூடிய சீக்கிரத்தில் லீக் தலைவர்கள் தங்கள் கொள்கையை மாற்றிக்கொண்டு ஒத்துழைக்க முன்வரவேண்டும். இல்லாவிடில் முஸ்லிம் சமூகத்தின் மனோபாவம் மாறி முஸ்லிம்கள் தங்களுடைய தலைவர்களை மாற்றிக் கொள்ள வேண்டும். இந்த இரண்டிலொன்று நடந்தே தீரும் என்று எதிர்பார்க்கலாம்.

* * *

ஆயிரம் வருஷத்துக்குப் பிறகு நமது பாரத புண்ணிய பூமியில் பூரண சுதந்திர ஆட்சி ஏற்படப் போகிறது. இமய மலையிலிருந்து கன்னியாகுமரி வரையில் ஒரே சுதந்திர ராஜ்யத்தின் தேசியக் கொடி வானளாவிப் பறக்கப் போகிறது.

இவ்வளவு விஸ்தாரமான தேசம், — நாற்பது கோடி ஜனத் தொகை கொண்ட தேசம், — ஒரே சுதந்திர அரசாங்கத்தின் கீழ் உலகத்திலே வேறு எந்தப் பகுதியிலும் தற்சமயம் இல்லை. இதற்கு முன்பும் இருந்ததில்லை. ஜனத்தொகை பெருத்த சீன தேசம் கூட இரண்டு அரசாங்கமாகப் பிளவுபட்டிருக்கிறது. இந்தியாவிலே தான் முதன் முதலாக அத்தகைய அதிசய ஆட்சி ஏற்படுகிறது.

எனவே, செப்டம்பர் 2உ பாரத மக்களுக்கு ஒரு மகத்தான பண்டிகை தினம்; குதூகலத்துடன் கொண்டாட வேண்டிய தினம். கால நிலைமையை முன்னிட்டு அந்தச் சுதினத்தை விசேஷமாகக் கொண்டாட முடியாது தான். எனினும் வசதியுள்ளவர்கள் எல்லாரும் கூடிய அளவில் கொண்டாட வேண்டும்.

அதைக் காட்டிலும் முக்கியமாக, நமது ஒப்புயர்வில்லாத தலைவர்களுக்குப் பூரண ஒத்துழைப்பை அளிப்பதாகத் தீர்மானம் செய்து கொள்வது மிக அவசியமாகும். செப்டம்பர் 2உ நமது தேசத் தலைவர்கள் இந்தியாவின் ஆட்சியை ஏற்றுக் கொள்ளும்போது அரசாங்க அதிகாரத்தை மட்டும் ஏற்றுக்கொள்ளப் போவதில்லை; நாற்பது கோடி மக்களைப் பசி பட்டினியிலிருந்தும் கொள்ளை கொலை முதலிய கொடுமையிலிருந்தும் அராஜகக் குழப்பங்களிலிருந்தும் காப்பாற்றும் மகத்தான பொறுப்பை ஏற்றுக் கொள்கிறார்கள். இன்றைய தினம் உலகத்திலேயே வறுமை மிகுந்ததாயும் தொழில் வளம் குறைந்ததாயும் உள்ள தேசத்தைச் செல்வப் பெருக்கும் தொழில் வளமும் உள்ள தேசமாக அவர்கள் செய்தாக வேண்டும். இந்தப் பெருமுயற்சியில் இமயமலையையும் விந்திய மலையையும் போன்ற பெரும் இடையூறுகளை அவர்கள் கடக்க வேண்டியதாயிருக்கும். இத்தகைய மகத்தான பொறுப்பை நமது மாபெருந் தலைவர்கள் ஏற்றுக் கொள்ளும் தினத்தில் அவர்களுக்கு நமது பூரண ஒத்துழைப்பை அளிப்பதென்று நாம் ஒவ்வொருவரும் திடமான சங்கல்பம் செய்து கொள்ள வேண்டும்.

---

சென்ற "கல்கி" இதழிலும் இந்த இதழிலும் வெளியாகியிருக்கும் தற்கால ஹாஸ்யத் துணுக்கு ஒவ்வொன்றுக்கும் ரூ. 5 வீதம் அனுப்பப்பட்டிருக்கிறது.

# "எனக்கு நல்லான்"

★ ★ ★

**வைஷ்ணவ** ஆச்சாரிய புருஷர் ஒருவர் ஆற்று வெள்ளத்திலே மிதந்து வந்த அநாதைப் பிரேதத்தை எடுத்து சம்ஸ்காரம் செய்வித்தார். இது காரணமாக ஊரிலுள்ள பிராமணோத்தமர்கள் எல்லாரும் அவரைப் பகிஷ்காரம் செய்து விட்டார்கள். அந்த உத்தம புருஷரின் வீட்டில் சிராத்தம் வந்தபோது பகவானே வைதிக வடிவத்தில் எழுந்தருளி "ஊருக்குப் பொல்லான் எனக்கு நல்லான்" என்று திருவாய் மலர்ந்து அவரை ஆட்கொண்டார். இதனால் அப்பெரியாரின் வம்சத்துக்கே "நல்லான் சக்கரவர்த்தி" என்ற பட்டப் பெயர் கிடைத்தது.

மேற்படி "**நல்லான் சக்கரவர்த்தி**" வம்சத்திலே பிறந்த ஸ்ரீ சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் தேசத்தின் நன்மையைக் கருதித் தாம் கண்ட உண்மையைத் தைரியமாக எடுத்துச் சொன்னார். பின்னால் அவர் கூறிய யோசனையே சரியான யோசனை என்று தேசத் தலைவர்கள் ஒப்புக் கொண்டார்கள். ஆனால் அவர் சொன்ன சமயத்தில் தேசத்தில் அதற்குப் பலமான எதிர்ப்பு இருந்தது.

இதை வியாஜமாகக் கொண்டு சென்ற ஆண்டில் நமது அதிசயமான சென்னை மாகாணத்தில் "ராஜாஜி வேண்டாம்" என்று ஒரு கிளர்ச்சி எழுந்தது. மேற்படி கிளர்ச்சி நடந்து கொண்டிருந்த காலத்திலேயே ராஜாஜி தமிழ் நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்தார். அந்தச் சுற்றுப் பிரயாணத்தின்போது ஸ்ரீரங்கத்துக்கும் போயிருந்தார். ஸ்ரீ ரங்கநாதப் பெருமான் "ஊரெல்லாம் உன்னை வேண்டாம் என்றாலும் எனக்கு நீ வேண்டும்" என்று அருளியதற்கு அறிகுறியாக ஸ்ரீ ரங்கநாதருடைய யானை ராஜாஜியின் கழுத்தில் மாலை சூட்டிய காட்சியை எதிர்ப் பக்கத்தில் காணலாம்.

ஸ்ரீ ரங்கநாதர் அருளியது போலவே பாரதத் தாயும் "நீ எனக்கு வேண்டும்!" என்று கோரினள். காங்கிரஸ் மகாசபையும் அவ்வாறே ராஜாஜியின் சேவையைக் கோரியது. சென்ற மாதத்தில் ராஜாஜி காங்கிரஸ் காரியக் கமிட்டி அங்கத்தினரானார். இந்த மாதத்தில் இந்தியாவில் ஏற்படப்போகும் முதலாவது சுதந்திர தேசிய சர்க்காரில் மந்திரியாக ராஜாஜி நியமிக்கப்பட்டிருக்கிறார்.

ராஜாஜி இந்திய தேசிய சர்க்காரில் மந்திரியான காரணத்தினால் இன்று தமிழ்நாடு இன்னும் ஒருபடி மேலே உயர்ந்திருக்கிறது. தமிழ் மக்களின் பெருமிதமும் குதூகலமும் பொங்கிப் பெருகி ஓடுகிறது.*

---

* எல்லோரையும்விட அதிக குதூகலம் அடைந்திருப்பவர் எதிர்ப் பக்கத்திலுள்ள காட்சியைப் படம் பிடித்த நமது புகைப்பட நிருபர் ஸ்ரீ எம். டி. கணேசன் ஆவர். இந்தப் படத்தை வெளியிடாததற்காக நம்மீது அவருக்கு ரொம்பவும் குறையிருந்தது. இப்போது அந்தக் குறை தீர்ந்து ஆனந்தத்தில் மூழ்கியிருக்கிறார்.

# சம்பளத்தைக் குறையுங்கள்!




எல்லோரும் "சம்பளம் அதிகப் படுத்த வேண்டும்" என்று கிளர்ச்சி செய்யும் போது ஏட்டிக்குப் போட்டியாக இப்படி ஒரு கிளர்ச்சி ஏன் ஆரம்பிக்கக் கூடாது?

# குறை தீரவேண்டும்

20—8—46
ராம்பாக்கம்

கல்கி ஆசிரியரவர்களுக்கு

'அதிக உணவுப் பொருள் உற்பத்தி' என்று சொல்லுவதோடு நில்லாமல் அதன் உற்பத்திக்கான வழிகளைச் சரியானபடி விவசாயிகளுக்குச் செய்து கொடுத்து அவர்களின் கஷ்டங்களுக்கான மூலகாரணங்களைப் போக்கினால் தேவையான உணவுப் பொருள் தாராளமாக உற்பத்தியாகும். இது விஷயமாக விவசாயிகளின் நிலையை உணர்ந்து சரியான அபிப்பிராயத்தைத் தெரிவிப்பதில் தமிழ் நாட்டில் ஏன், பத்திரிகை உலகிலேயே முன்னணியில் நிற்பது கல்கியேயாகும். சென்ற கல்கி இதழில் டாக்டர் ராஜன் அவர்கள் மேல் சபையில் பேசியதைச் சரியான முறையில் விளக்கி எழுதியிருப்பதை எந்த விவசாயியும் பாராட்டாமலிருக்க முடியாது.

நான் ஒரு சாதாரண விவசாயி. என் அனுபவத்தை எழுதித் தங்கள் பத்திரிகையில் பிரசுரமானால் உடனடியாக விவசாயிகளுக்கு ஏற்ற பரிகாரம் கிடைக்குமென எதிர் பார்க்கிறேன். நான் புண்ணாக்கு வாங்குவதற்காக விழுப்புரம் போய் விவசாய டிமான்ஸ்ட்ரேட்டர் ஆபீஸில் கேட்டதற்கு என்னுடைய கைச்சாத்து (நிலத்திற்கு சர்க்கார் தீர்வை செலுத்தியதற்கு வாங்கும் ரசீது) கொண்டு வந்து காட்டினால் கொடுப்பதாகச் சொன்னார்கள். பிறகு கிராமத்திற்கு வந்து கைச்சாத்து கொண்டு போய்க் கேட்டதற்கு கிராம மணியம் அல்லது கர்ணம் சர்ட்டிபிகேட்டுடன் வந்தால்தான் கொடுக்க முடியுமென்று சொல்லி விட்டார்கள். அன்றும் திரும்பி வந்து கர்ணம் சர்ட்டிபிகேட்டுடன் போய்க் கேட்டதற்கு "அந்த உத்தரவுகள் எல்லாம் மாறிவிட்டன; இனிமேல் கிராமக் கமிட்டியாரிடம் சர்ட்டிபிகேட்டு வாங்கி வந்தால்தான் கொடுப்போம்" என்று சொல்லி விட்டார்கள். அதேமாதிரி ஆபீஸ் நோட்டீஸ் போர்டிலும் எழுதியிருக்கிறது.

வழக்கம்போல் வெறுங் கையுடனே ஊர் திரும்பியும் பிரயத்தனத்தைக் கைவிடாமல் கிராமக் கமிட்டி பிரஸிடெண்டிடம் சர்ட்டிபிகேட் வாங்கிக் கொண்டு வந்து கேட்டேன். கிராமக் கமிட்டிகளுக்கான பாரத்தில்தான் சர்ட்டிபிகேட் வாங்கிவர வேண்டுமென்று சொன்னார்கள். இதுவரை எந்தவிதமான பாரமும் கிராமக் கமிட்டிக்கு சப்ளை செய்யவில்லையே என்று சொன்னதற்குப் புண்ணாக்கு விநியோகிக்கும் சரியான முறை எதுவும் தெரியவில்லை என்றும் அது விவரம் கிடைக்கும் வரையில் தர முடியாதென்றும் சொல்லி விட்டார்கள்.

இதைச் சிந்தித்துப் பார்த்தால் விவசாயியின் நிலை எப்படி இருக்குமென்பதை உணர்வதுடன் உணவுப் பொருள் உற்பத்திக்கான ஏற்பாடுகள் எவ்வளவு வேகமாக நடைபெறுகிறதென்பதும் விளங்கும். தவிரவும் எங்கள் ராம்பாக்கம் கிராமத்திற்கும் டிமான்ஸ்ட்ரேட்டர் ஆபீஸ் உள்ள விழுப்புரத்திற்கும் 15 மைல் தூரம் இருப்பதாலும் ஒவ்வொருதரமும் போய்த் திரும்பி வருவதில் எவ்வளவு சிரமமிருக்கிறது பாருங்கள்! விவசாயி புண்ணாக்கு வாங்குவதற்கே இந்தப் பாடுபட்டால் விவசாயத்தில் எப்படி அபிவிருத்தி காணமுடியும்? உணவுப் பொருள் உற்பத்தியில்தான் எப்படி அபிவிருத்தி ஏற்பட முடியும்? விவசாயத்தில் அனுபவமுள்ள டாக்டர் ராஜன் அவர்களின் யோசனையை அனுசரித்து நமது மந்திரி சபையார் அபிவிருத்திகள் செய்தால் நல்ல பலன்கள் காணலாம். ஜனங்கள் விரும்பாத கோதுமைக்கு அதிகப் பணம் கொடுத்து வாங்கி விலையைக் குறைத்து விற்று நஷ்டமடைகிறார்கள். அப்படி நஷ்டமடையும் பணத்தைக் கொண்டே நம் மாகாணத்தின் விவசாயத்திற்கான உதவிகளைச் செய்யலாம். உடனடியாகப் பஞ்சமும் தீரும்.

—எஸ். கோதண்ட சீதாராமன்

கிராண்டு அணைக்கட்டு
21—8—46

கல்கி ஆசிரியர் அவர்களுக்கு

"செந்தமிழ் நாடென்னும் போதினிலே —இன்பத்
தேன் வந்து பாயுது காதினிலே"

என்று பாரதியார் பாடினார்.

இன்று அந்தச் செந்தமிழ் நாடு பஞ்சத்தில் தவிக்கிறது. மற்றெவ்வித காரணம் பஞ்சத்திற்கு இருந்தாலும் எனக்கு முக்கியமான காரணம் ஒன்று தோன்றுகிறது. அதாவது லஸ்கர்களின் வயிற்றெரிச்சல்தான்.

விவசாயத்திற்குத் தேவையானபோது தண்ணீரை அதிகரித்து விட்டும், தேவையற்றபோது தண்ணீரைக் குறைத்தும் 24 மணி நேரம் வேலை செய்து நாட்டின் பஞ்சத்தைப் போக்க லஸ்கர்கள் உழைக்கிறார்கள். ஆனால் அவர்கள் பெறும் சம்பளம் ரூ. 10 தான். அன்றும் அதே சம்பளம்—இன்றும் அதே சம்பளம். அலவன்ஸ் ரூ. 16 சேர்த்துக்கொண்டாலும், ஒரு நாளைய சம்பளம் கிட்டத்தட்ட 0—14—0. ஒரு நாள் லீவு எடுத்தால் 0—14—0 அரோகரா! ஒரு மணி நேரம் இரவில் தூங்கித் தண்ணீர் அதிகமாக்கியோ அல்லது குறைத்தோ விட்டால் ஒரு வாரம் சஸ்பெண்டு அல்லது அபராதம். மொத்தத்தில் ஓய்வில்லாமல் அபராதம் செலுத்தியது போக மீதம் 20 ரூபாய் கட்டாயம் அவர்களுக்குக் கிடைக்கும். இதை வைத்துக் கொண்டு காலம் தள்ள வேண்டும். அதாவது 0—10—8 ஒரு நாளைக்கு. அரிசி, உப்பு, புளி, மிளகாய், விறகு, எண்ணெய், காய்கறி, குழந்தைகள் படிப்பு சகல செலவுகளுக்கும் இதை நம்பிக் காலந் தள்ள வேண்டும்.

கவர்ன்மெண்டின் ஜி. ஓ. பிரகாரம் சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கு ரூ. 36 அலவன்ஸ் ஆறு மாதத்திற்கு (1-7-44ல் இருந்து 31-12-44 முடிய) கொடுக்கச் சொல்லி உத்திரவிட்டார்கள்.

சென்னை மாகாணத்தில் தஞ்சை சர்க்கிளில் P. W. டியில் கீழ்த்தர சிப்பந்திகளுக்கு மட்டும் ரூ. 36 அலவன்ஸ் தரக்கூடாது என்று பிறகு மறு உத்திரவு வந்தது.

சில இடங்களில் கொடுக்கப்பட்டுச் செலவாகிவிட்டது. அவர்களிடம் திரும்ப வசூல் செய்ய உத்தரவு வருகிறதாம்! எந்தக் காலத்தில் எங்கள் குறைகள் தீருமோ தெரியவில்லை.

—எஸ். கோபாலன்.

வேதநல்லூர்,
22—8—1946.

கல்கி ஆசிரியர் அவர்களுக்கு

தங்கள் வாரப்பத்திரிகை கல்கியை ஆரம்பத்திலிருந்து படித்து வரும் ஓர் ஏழை ஆசிரியன் நான். தாங்கள் ஆரம்பத்திலிருந்து ஒவ்வொரு விஷயத்தைப் பற்றியும் வற்புறுத்தி தக்க யோசனைகள் தகுந்த சந்தர்ப்பங்களில் வெளியிட்டு வந்திருக்கிறீர்கள். தங்கள் யோசனைகளை அங்கீகரித்து திருத்திக் கொண்டவர்கள் கௌரவமடைந்தார்கள். அரசாங்கத்திலும் அப்படியே முன் கூட்டித் தங்கள் யோசனைப்படி நடந்த சந்தர்ப்பங்களில் தன் மதிப்பைக் காத்து தேசத்திற்கும் நன்மை செய்து வந்திருக்கிறது.

ஆனால் ஆசிரியர்களாகிய எங்கள் விஷயத்தில் தாங்கள் கூறிய யோசனைகளைத் தற்போது நடந்து வரும் ஜனப்பிரதிநிதி சர்க்காரின் காங்கிரஸ் மந்திரிகள் ஏற்றுத் தகுந்த பரிகாரம் செய்யாமல் இருப்பது மிகவும் விசனிக்கத்தக்கது.

பலர் நிறைந்த அறிவும், ஆற்றலும், வித்தையும் பெறுவதற்கும் உத்தியோகங்கள் வகிப்பதற்கும் காரணமான உபாத்தியாயர்கள் விஷயத்தில் மந்திரிகளும், அதிகாரிகளும் மற்ற அறிவுள்ள பிரமுகர்களும் இவ்வளவு தாராள மனப் பான்மையுடன் இருப்பது எங்கள் துரதிர்ஷ்டமே யாகும்.

தங்கள் பத்திரிகையின் தலையங்கத்தில் "ஊருக்கு இளைத்தவர் பள்ளிக்கூட உபாத்தியாயர்கள்" என்று எழுதியதுடன் "உலகத்திற்கே இளைத்தவர் பஞ்சாயத்து போர்டு பள்ளிக்கூட உபாத்தியாயர்" என்று சேர்த்து எழுதியிருந்தால் ரொம்பப் பொருத்தமாயிருக்கும். பஞ்சாயத்து போர்டு உபாத்தியாயர் 6 மாதத்திற்கு ஒரு தடவையோ, வருஷத்திற்கு ஒரு தடவையோ, தமக்கென்று சாஸ்வதமாக ஏற்படுத்தப் பட்ட சம்பளம் ரூபாய் பதினைந்தைப் பார்ப்பார். வருஷத்திற்கு ஒன்று அல்லது இரண்டு மாதம் சாப்பிட்டு விட்டு ஒட்டகத்தைப் போல மறுபடியும் அடுத்த வருஷ விரண்டை எதிர்பார்க்க வேண்டியதுதான்!

தற்போது மாதா மாதம் அதிகமான சம்பளம் வாங்கும் தொழிலாளிகள் முதல் உத்தியோகஸ்தர்கள் வரையில் ஊதியம் போதாதென்று ஸ்டிரைக் தீர்மானங்கள் அனுப்பி இன்னும் சம்பளங்களை உயர்த்திக் கொள்ளுகிறார்கள். இந்நாளில் 6 மாத காலமாகப் பஞ்சாயத்துப்போர்டு உபாத்தியாயர்களுக்குச் சம்பளமே சாங்ஷன் செய்யாததைத் தங்கள் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். எங்கள் நிலைமையை மந்திரிமார்கள் யோசித்தால் நன்கு புலனாகும். தாங்கள் உபாத்தியாயர்களுக்காகக் கனம் மந்திரிகளுக்கு உபதேசித்ததை யெல்லாம் செவிடன் காதில் ஊதிய சங்கு ஆகாது என்று எண்ணுகிறேன்.

பஞ்சாயத்து போர்டு உபாத்தியாயர்கள் தங்களுக்கு அதிகப்படியான சம்பளத்திற்குப் போராடுவதற்குப் பதிலாக, வருஷந்தோறும் சாங்ஷன் செய்யும் தொகையைக் காலாகாலத்தில் கொடுத்தால் போதும் என்றுதான் நமது காருண்யமுள்ள ஜனப்பிரதிநிதி காங்கிரஸ் சர்க்காரை வேண்டிக் கொள்கிறார்கள்.

இப்படிக்கு,
ஓர் ஏழை பஞ்சாயத்து போர்டு
உபாத்தியாயன்.

மேல்பள்ளிப்பட்டு,
24—8—46

கல்கி ஆசிரியர் அவர்களுக்கு

எங்கள் தாலூக்கா தாசில்தார், ஸ்ரீ தங்கவேலுப் பிள்ளை M.L.A. ஆகிய இருவர்களும் சேர்ந்து பொது ஜனங்களின் அபிப்பிராயப்படி உணவுக் கமிட்டிகளை 24-6-46 அன்றும் 25-6-46 அன்றும் அமைத்தார்கள். பிர்க்காக்களிலிருந்து தாலுகா கமிட்டிக்குத் தேர்தல் நடந்தது. இந்தத் தேர்தலுக்கு நால்வர் போட்டியிட்டனர். நால்வரில் நான் ஒருவனும், இன்னொரு பணியாக்காரரும் வெற்றி பெற்றோம். என்னை எதிர்த்து நின்று தோல்வி அடைந்த அபேட்சகர் ஒருவர் என்னைப் பற்றித் திருவண்ணாமலை R. D. O. அவர்களிடம் ஏதேதோ கூறி ஷை தேர்தலையும் நான் பிரதிநிதியாக வந்த மேல்பள்ளிப்பட்டு, மேல்சாவந்தவாடி, செங்கம், புழுதியூர் இந்த நான்கு ஊர்க் கமிட்டிகளையும் ரத்து செய்யப் பண்ணிவிட்டார். ஸ்ரீ தங்கவேலு அவர்களும், தாலுகா தாசில்தார் அவர்களும் நடத்திய தேர்தலையும் கமிட்டியையும் எந்தக் காரணத்தினால் ரத்து செய்தார்கள் என்று தெரியவில்லை. சுமார் ஆயிரம் பேருக்கு மேல் ஷை கிராம ஜனங்கள் 29-6-46ல் R. D. O. அவர்களிடம் நேரில் ஆக்ஷேபனை செய்தும் பிரயோசனமில்லை. இது விஷயமாய்க் கனம் பிரதம மந்திரிக்குத் தகவல் தெரிவித்தும் பதில் இல்லை. தற்போது அமைக்கப்பட்டிருக்கும் கமிட்டிகளில் காங்கிரஸ் அபிமானிகளுக்கும், உண்மை ஊழியர்களுக்கும் இடம் கொடுக்கப்பட வில்லை. தங்கள் பத்திரிகையிலாவது எங்களுக்கு இடம் கொடுக்கக் கோருகிறேன்.

தங்களன்புள்ள,
என். ஏ. சிவம்.

---



# விநாயகர் கவலை

நாரதர் :—என்ன விநாயகரே! ஏன் ஒரு மாதிரியாக வருத்தத்துடன் உட்கார்ந்து கொண்டிருக்கிறீர்கள்?

விநாயகர் :—ஒன்றுமில்லை. இந்த வருஷத்து சதுர்த்திக்கு எங்கே கொழுக்கட்டையைக் கோதுமையிலேயே செய்து விடப் போகிறார்களோ என்றுதான் கவலையாயிருக்கிறது.

—வி. ராமஸ்வாமி.

ப்பியிலே நல்லெழுத்து விளைந்திடும்
செய்தி அறியாயோ — நன்னஞ்சே! — செய்தி அறியாயோ?
ப்பையிலே மலர்கொஞ்சும் குருக்கத்திக்
கொடி வளராதோ? — நன்னெஞ்சே — கொடி வளராதோ?

# ப்பையிலே குருக்கத்தி

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

கிருஷ்ணப்ப நாயக்கன் தெருவில் ல்ஜி சேட் வீட்டில் அவருக்கு இரண் டாவது கலியாணம். தெரு முழுதும் ந்தல் போட்டு அடைத்துவிட்டு மிக மரிசையாக விருந்து நடந்தது.

வேலைக்காரர்கள் பலர் மிகப் பரபரப் ாக வேலை செய்தார்கள். இலைகளை டுத்துக் குப்பைத் தொட்டியில் போட் ார்கள். தொட்டியில் போடப்பட்டது ழுக்கம்போல் பாதி வெளியில்தான் ழுந்தது. உடனே நான்கு நாய்கள் ற்றிக்கொண்டன. ஐந்தாவதாகிய ஒரு ாய் கொஞ்சம் பதுங்கிப் பதுங்கி நின்று ங்கெடுக்கப் பார்த்தது. மற்ற நாய்கள் ன்' 'வள்' என்று குலைத்தும் அதன் மல் பாய்ந்தும் அதை விரட்டித் ரத்தி விட்டன. அந்த நாய் அந்தத் ரு நாயல்ல. நாய்களுக்குள் விவ ஸ்தை உண்டு. ஒரு தெரு நாய் ன்னொரு தெருவுக்கு வரக் கூடாது.

* * *

“அடே, கிருஷ்ணப்ப நாயக்கன் தருவில் சேட்டுக் கிழவருக்குக் கலி ாணமடா! வா, அங்கே போகலாம்!” ன்றான் ஒரு பையன். அவனுக்கு இடுப் ல் துணி இல்லை. கோவணம்தான் ட்டி யிருந்தான். வயது பதினாலு ருக்கும். சென்னையில் இந்த மாதிரி று பையன்கள் தெருவில் அலைவதைக் ண்டிருப்பீர்கள். வெகு சாமர்த்திய ள்ள பையன்கள். ஆனால் அவர்களைக் வனிப்பவர் யாரும் இல்லை.

“அங்கே போனால் விரட்டி யடிப் ார்கள்” என்றான் மற்றொருவன். இவ ுக்கு எட்டு வயதுதான் இருக்கும்.

“இல்லை, இல்லை! சேட் வீட்டார் ல்லவங்கடா!” என்றான் முதல் பையன்.

“வேண்டாமடா! ஏனாதிகள் வந்து டிக்கப் போடுவாங்கடா!” என்றான் ரண்டாவது பையன்.

“இல்லே, பயப்படாதேடா! அவங்க யாரும் வரக் காணோம். அவர்களுக்குத் தெரியல்லே போயிருக்குது” என்றான் முதல் பையன்.

இருவரும் கிருஷ்ணப்ப நாயக்கன் தெருவுக்கு ஓடினார்கள். போய், குப்பைத் தொட்டியண்டை இலைகளை இழுத்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்த நாய்களையெல்லாம் கல்லை விட்டெறிந்து விரட்டித் துரத்தினார்கள். துரத்திவிட்டு இலைகளையெடுத்து அவசர அவசரமாக அவற்றிலிருந்த சாப்பாட்டுப் பண்டங்களை வழித்து எடுத்து ஒரு இலையில் போட்டுச் சேர்த்துக் கொண்டும் அவ்வப்போது கொஞ்சம் வாயில் போட்டுச் சாப்பிட்டுக் கொண்டும் இருந்தார்கள்.

திடீரென்று தெருக் கோடியில் இரைச்சல் கிளம்பிற்று.

“அடே, வந்துட்டாங்கடா!” என்றான் சின்னப் பையன்.

“கொல்லு! திருட்டுப் பசங்கள்! யாரடா, நீங்கள் எங்கள் தெருவுக்குள் வந்து சாப்பிடுகிறீர்கள்?” என்று சொல்லிக்கொண்டு ஐந்தாறு ஏனாதிகள் வந்தார்கள். அவர்களில் இரண்டு பேர் ஸ்திரீகள். கூட்டமாக வந்து பையன்களைச் சுற்றிக் கொண்டு அடித்தும் உதைத்தும் துரத்திவிட்டார்கள். துரத்திவிட்டுக் குப்பைத் தொட்டியைச் சுற்றி நிதானமாகச் சிரித்துக் கொண்டு சந்தோஷமாக உட்கார்ந்தார்கள்.

எல்லா இலைகளையும் ஒருங்கே எடுத்து வைத்துக் கொண்டு அவற்றிலிருந்த பண்டங்களையெல்லாம் ஒரு துணியில் போட்டுக் கட்டிக்கொள்ள ஆரம்பித்தார்கள்.

* * *

அடுத்த நாள் சேட் வீட்டண்டை “சாமி! சாமி!” என்று கூப்பிட்டுக் கொண்டு ஒரு பையன் வந்து நின்றான்.

வீட்டுக்குள்ளிருந்து வேலைக்காரன் ஒருவன் ஒரு எச்சில் இலையை எடுத்துக் கொண்டு வெளியே வந்தவன், "படவாப் பயலே! இவ்வளவு தைரியமா உனக்கு? போ வெளியே! தொட்டியில் போட்ட பிறகு எடுத்துக் கொள்!" என்றான்.

"இல்லே, சாமி! எறுதிகள் அடிச்சுப் போடுவாங்க. கையில் கொடுத்து விடுங்கோ. நான் இங்கேயே சாப்பிட்டு விட்டுத் தொட்டியில் இலையைப் போட்டு விடுகிறேன்!" என்றான் பையன்.

இவன் நேற்று நாம் பார்த்த பையன்களில் பெரியவன். சின்னவன் வரமாட்டேன் என்று சொல்லி விட்டான்.

வேலைக்காரன் பையனிடம் கருணை கொண்டு இலையை அவன் சொன்ன படியே அவன் கையில் பொத் என்று போட்டான்.

"சாப்பிட்டுவிட்டு இலையை இங்கேயே எறிந்து விடாதே! உதைத்துப் போடுவேன்!" என்று சொல்லிவிட்டு வேலைக்காரன் உள்ளே போய் விட்டான்.

"சாமி! சாமி!" என்றான் பையன் மறுபடியும்.

"என்னடா, படவாப் பயலே!" என்று வேலைக்காரன் திரும்பிப் பார்த்து அதட்டினான்.

"இந்தாங்கோ சாமி, மோதிரம்!" என்றான் பையன்.

உடனே வேலைக்காரன் வாசலுக்கு வந்தான்.

"இலையில் மோதிரம் கிடைத்ததுங்கோ, இந்தாங்கோ!" என்று ஒரு வயிரக் கல் இழைத்த மோதிரத்தைக் கொடுத்தான். வேலைக்காரன் அதைத் தன் கைச் செம்பிலிருந்த ஜலத்தை விட்டு அலம்பி எடுத்துப் பார்த்தான். பளபளவென்று மின்னிற்று.

"அடே, எஜமானர் மோதிரமடா!" என்று மெள்ளச் சொல்லி வாங்கிக் கொண்டு உள்ளே போனான்.

* * *

லால்ஜி சேட்டு மகன் ராம்லால் சேட்டினுடைய வயிர மோதிரம் காணாமல் போனதற்காகப் போலீசார் வெகு மும்முரமாகத் துப்பு விசாரித்துக் கடைசியில் ஒரு ஷராப்புக் கடையில் கண்டு பிடித்தார்கள். கடைக்காரனை விசாரித்தார்கள். "யாரோ ஒரு பையன் கொண்டு வந்து 'இது நல்ல வயிரமா, பாருங்கள் என்று சொன்னான். வாங்கிக் கொண் 'நாளைக்கு வா, பார்த்துச் சொல் கிறேன்' என்று சொல்லி விட்டு வயிர பரீட்சைக்காரன் வரட்டும் என் எடுத்து வைத்திருந்தேன். அதற்குள்ளே நீங்கள் வந்து இதைத் திருட்டுச் சொத் என்கிறீர்கள்" என்று ஷராப்புக் கடை காரன் சொன்ன கதை இன்ஸ்பெக்டரு க்குத் திருப்தி யளிக்கவில்லை. "அரஸ் செய்துதான் தீரவேண்டும். உன்பேரி பல கேஸ்கள் பதிவாயிருக்கின்றன என்று சொன்னார் இன்ஸ்பெக்டர்.

"வேண்டாம், ஸார்! கல்யாணத்தன் ஒரு பையன் வீட்டைச் சுற்றிக் கொண் டிருந்தான். அவனை நான் கண் பிடித்துக் கொடுக்கிறேன். அவனை விசா யுங்கள், ஒரு வேளை உண்மை தெரியும் என்றான் சேட் வீட்டு வேலைக்கார அங்கே இன்ஸ்பெக்டரைச் சுற்றி கொண்டிருந்த தெருக் கூட்டத்தில் ரா லால் சேட்டுடன் அவனும் வந்திருந்தா

* * *

எச்சில் பொறுக்கிப் பைய போலீஸ் ஸ்டேஷனில் கைதியாக அழு கொண்டிருந்தான். பலமாகக் கூச்ச போட்டு அழுதான்.

"பாசாங்கு செய்கிறாயா, படவா பயலே? கொண்டு வா, பிரம்பு என்றார் சப் இன்ஸ்பெக்டர்.

"இல்லே ஸார்! எனக்கு ஒன்று தெரியாது. நான் எச்சில் இலை பொறு கிச் சாப்பிடுகிறவன்" என்றான் பைய

"எச்சில் இலையில்தான் இது கிட ததா? திருட்டுப் படவாப் பயலே, பொ சொல்லாதே! கலியாண வீட்டுக்கு மெள்ள நுழைந்து எடுத்து வந்துவிட் மறைக்கிறாயா? கொண்டு வா கொ நன்றாகக் காய்ச்சிக் கொண்டு வா என்றார் சப் இன்ஸ்பெக்டர் ஒரு கான் டேபிளைப் பார்த்து.

இந்தக் காலத்தில் இந்த மாதிரி கொ மைகள் செய்வதில்லை, வெறும் ப முறுத்தல் என்பது பையனுக்குத் தெ யுமா? பயந்து நடுநடுங்கினான். பைய வைத்தியக்காரனைப்போல் விழித்தான் "திருட்டு முழி முழிக்கிறாயா?" என் சப் இன்ஸ்பெக்டர் பையனை உதைக்க போனார்.

அதற்குள் பெரிய இன்ஸ்பெக் வந்துவிட்டார். "என்ன சொல்லுகிறா திருட்டுப் பையன்?" என்று அவர் கா

...யில் அமர்ந்தார். "தான் திருட ...லை, தனக்கு ஒன்றும் தெரியாது, ...ச்சில் இலைக்காகப் போயிருந்தேன் ...ன்று சொல்லுகிறான்" என்றார் சப் ...ன்ஸ்பெக்டர்.

"சேட் வாக்கு மூலத்தில் 'ஒரு வேளை ...ப்பிட்ட இலையில் மோதிரத்தைக் ...ழற்றி வைத்துப் பிறகு மறந்து ...பாயிருக்கலாம். இடது கை விரலில் ...ண்ணாக இருந்தது. வலது கையிலிருந்து ...ழற்றி இலையின் மூலையில் வைத்து ...ட்டுச் சாப்பிட்டேன். பிறகு ஒரு வேளை ...மாதிரத்தை இலையில் மறந்து வைத்து ...ட்டேனோ, அல்லது போட்டுக் கொண் ...டேனோ ஞாபகமில்லை' என்கிறார். ...பயனை நன்றாக விசாரியுங்கள்" என்று ...சொல்லிவிட்டுக் கிளம்பினார்.

* * *

பையன் சொல்லுவதை சப் இன்ஸ் ...க்டர் நம்பவில்லை. முதலில் ஒன்றும் ...தரியாது என்று சொன்னவன், பிறகு ...லைக்காரனிடம் கொடுத்து விட்டேன் ...ன்றால் போலீஸ்காரர் நம்புவார்களா? ...வில் ஷராப்புக் கடைக்காரன்மேல் ...ந்தேகமில்லை என்று தீர்மானித்துப் ...பயனைக் குற்றவாளிச் சிறுவர் பள்ளிக் ...டத்தில் ஐந்து வருஷம் இருக்கும்படி ...னுப்பி விட்டார்கள்.

* * *

"ஒன்று சொல்ல வேண்டும், ...ஜமான்!" என்றான் ஒரு நாள் வேலைக் ...ரன் வேலாயுதம்.

"என்ன?" என்றார் சேட் கிழவர்.

"நான் பெரிய தப்பு செய்துவிட்டேன். ...ய்வம் என்னைத் தண்டிக்கும். நீங்கள் ... சொல்ல வேண்டும்" என்றான்.

பிறகு, வேலைக்காரன் நடந்ததைச் ...சொன்னான். "பையனை ஜெயிலுக்கு ...னுப்பி விட்டார்களே? அந்தப் பையன் ... குற்றமும் செய்ய ...லை. நான்தான் திரு... அவன் எச்சில் ...லையை என்னிடம் ...ந்து கெஞ்சி வாங் ... கொண்டவன், இலை ... சோற்றோடு மறைந் ...ந்த மோதிரத்தை ...க்து என்னிடம் ...டுத்து விட்டான். ...னைத் திருட்டுப் ...ிடித்துக் கொண் ... நான் சின்ன



எஜமானரிடம் கொண்டுபோய்க் கொடுப்பதற்குப் பதில் மறைத்து வைத்து மறு நாள் ஷராப்புக் கடைச் செட்டியாரிடம் காட்டினேன். அவர் 'நாளைக்கு வா, சொல்லுகிறேன்' என்று வாங்கி வைத்துக் கொண்டார். அதற்குள் போலீசார் கண்டு கொண்டார்கள்" என்றான் வேலைக்காரன்.

"வேலாயுதம்! நம்ம வீட்டில் பதினைந்து வருஷம் இருந்து சாப்பிட்டு விட்டு இப்படிச் செய்தாயே! இது தருமமா? அந்த எச்சில் பொறுக்கிப் பையன் யோக்கியமாக உன்னிடம் மோதிரத்தைக் கொடுத்தானே, எவ்வளவு சத்தியமாக நடந்து கொண்டான்? நீ இப்படிச் செய்து விட்டாயே! அவன் பாவம், இப்போது ஜெயிலில் இருக்கிறானே!" என்றார் லால்ஜி சேட்.

"அதுதான் என்னைத் தொந்தரவு படுத்துகிறது, சாமி! எனக்கு என்ன தண்டனையாவது கொடுங்கள்!" என்றான் வேலாயுதம்.

"சரி, ஒரு தண்டனையும் வேண்டாம், போ! அந்தப் பையனை விடுதலை செய்வித்துவிடப் பார்க்க வேண்டும்" என்றார்.

* * *

ஆறு மாதங்கள் கழிந்தபின் பெரிய சிபார்சுகளின் பேரில் பையனுக்கு விடுதலையும் ஆயிற்று. "நான் இனிமேல் திருட மாட்டேன்; நல்ல நடத்தையாயிருப்பேன்" என்று பையனிடம் சிறைச்சாலை அதிகாரிகள் உறுதிமொழி வாங்கிக் கொண்டு அவனை விடுதலை செய்து விட்டார்கள்.

சேட்டு வேலைக்காரன் வேலாயுதம் பையனுடைய அந்த உறுதிமொழிக்கு ஜாமீன் கையெழுத்துப் போட்டான்!

இப்போது பையன் சேட்டுக்கு எண்ணெய் தேய்க்கும் ஆள். ரொம்ப சந்தோஷமாகத்தான் இருக்கிறான்.

"உனக்குச் சீக்கிரம் நல்ல பெண் பார்த்துக் கலியாணம் செய்விக்கிறேன்" என்கிறார் சேட்டுக் கிழவர், பையனுக்கு வேடிக்கையாக.

"எனக்கு அது வேண்டாங்கோ!" என்கிறான் பையன்.

"ஏன் வேண்டா மென்கிறாய்? கலியாணம் நல்லதுடா!" என்கிறார் கிழவர்.

# ஒரு நிமிஷம்!

கோமதி ஸ்வாமிநாதன்

என் வாழ்வின் இன்பமே!

இதுவரை உன்னை எத்தனையோ பெயர்களால் அழைத்து நான் இன்புற்றிருக்கிறேன். ஆனால், எப்படிக் கூப்பிட்டும் நீ அனல் வீசும் உன் கோபக் கண்களால்தான் என்னைப் பார்க்கிறாயே ஒழிய, மோகனக் கண்கள், கனிந்த பார்வை, கடைக்கண் நோக்கு என்றெல்லாம் கதாசிரியர்கள் வர்ணிக்கிறார்களே, அந்த மாதிரிப் பார்வையை நான் உன்னிடம் ஒருநாள்கூடக் கண்டதில்லை.

துரதிர்ஷ்ட வசமாக எனக்கு வேறு யாராவது வாழ்க்கைத் துணைவியாக வாய்த்திருந்தால், உன்னால் எனக்குக் கிடைத்த அனுபவங்கள் எவ்வளவோ கிடைக்காமலே போயிருக்கும்! அவ்வளவு அனுபவங்களையும் எனக்கு அளித்த உனக்கு நான் மிகவும் கடமைப் பட்டவனாக இருக்கிறேன். உனக்கு என் நன்றி!

மாஜி சர்வாதிகாரி ஹிட்லர் சாம்ராஜ்ய வெறி கொண்டு ஜன சமூகத்தை என்ன பாடு படுத்தினானோ, அதைவிடப் பன்மடங்காக ஒரு சமயம் ஜார்ஜெட் ஜம்பர் வெறியேறிய நீ என்னைப் படுத்திய பாட்டை நான் மறக்க முடியுமா? உன் அட்டகாசத்தினாலும் கோபத்தாலும் நான் ஒரு வாரம் ஹோட்டலில் சாப்பிடப் போக அதனால் ஏற்பட்ட நிரந்தர வயிற்று வலியை நான் என்றும் மறக்க முடியாது. மும்தாஜ் பீகத்தின் ஞாபகார்த்தமாக ஷாஜஹான் சக்கரவர்த்தி எழுப்பிய தாஜ்மஹால் இன்று எவ்வாறு விளங்குகிறதோ, அதே மாதிரி உன்னால் உண்டான வயிற்று வலியும் இன்றுவரை விளங்கிக் கொண்டிருக்கிறது!

ஒரு விஷயத்தில் சந்தோஷம்: பிரபல தேசத் தலைவருக்கு வேண்டிய பிடிவாதமும், தர்க்க சாமர்த்தியமும், சத்தியாக்கிரகத் தன்மையும் உன்னிடம் இருக்கின்றன. 'ஜார்ஜெட் ஜம்பர் வாங்குவதற்குத் தற்சமயம் நிதி இலாகா அவ்வளவு திருப்திகரமான நிலைமையிலில்லை' என்று நான் சொல்லியதும், உக்கிரத்துடன் நீ செய்த பிரசங்கத்தை நான் மறக்கவே முடியாது! ஸ்திரீகளின் நிலைமையையும் அடிமைத் தனத்தையும் நிதர்சனமாக எடுத்துக் காண்பித்து அலறினாய். எனக்கு மாத்திரம் அதிகாரமிருந்திருந்தால் அன்றைக்கே உனக்கு 'மனைவிஸ்தான்' அளித்திருப்பேன்.

கடைசியில் எப்படியோ உன் கட்சியே ஜயித்தது. இருபது ரூபாய் கடன் வாங்கி அதன்மூலம் உன் திருப்தியை விலைக்கு வாங்கினேன். அந்தக் கடனை இரண்டு வருஷங்களாய் அடைக்க முடியாமல் இரண்டு பர்லாங்கில் இருக்கும் ஆபீஸிற்குத் தினசரி இரண்டு மைல் தூரம் சுற்றிக்கொண்டு போகிறேன்!

க்யூவில் நின்று துணி வாங்கி உன் முகத்தில் புன்னகையை எதிர்பார்த்து நான் உன்னிடம் சமர்ப்பித்தபோது, "இது பிரயோஜனமில்லை: இது கர்நாடகம்; இந்தக் கோடு அப்படிப் போட்டிருக்க வேண்டும்......!" என்றெல்லாம் சொல்லி, எவ்வளவு நிர்த்தாக்ஷண்யமாய்த் திருப்பி இருக்கிறாய்! அவைகளென்ன, கதைகளா கட்டுரைகளா, வேறு பத்திரிகைகளுக்கு அனுப்ப!

அன்றொரு நாள் எப்படியாவது உன்னைப் புன்னகை பூத்த முகத்துடன் பார்க்க வேண்டுமென்று மூன்று ரூபாய் கலை அழுது 'ஹாஸ்யக் களஞ்சியம்' என்னும் புத்தகத்தை வாங்கி வந்து உன் கையில் கொடுத்தேன். அதன் அட்டையின் அழகைக் கூடப் பார்க்காமல் "இதற்குக் கொடுத்த தண்டக் காசிற்கு இரண்டு அலுமினியத் தட்டுகள் வாங்கினாலும் உழைக்கும்!" என்று சொல்லிக் கொண்டே, அந்தப் புத்தகத்தை மூலையில் எறிந்தாய். அப்போது உன் வார்த்தைகளில் ஏற்பட்ட உஷ்ணத்தால், இந்து மகா சமுத்திரத்தையே பொங்க வைத்திருக்கலாம்!

ஆனாலும், உன் முகத்தில் எப்படியும் புன்னகையைப் பார்ப்பது என்று நிர்மாணித்து விட்டேன். ஆகவே, உன் தாயாரை அடுத்த ரயிலில் வந்து உன்னைப் பார்க்கும்படி கடிதம் எழுதியிருக்கிறேன். அம்மா வந்து விட்டால்தான் உன்னுடைய சந்தோஷம் கரைபுரண்டு ஓடுமே!............

**குறிப்பு**:—மேலே கண்டவாறு மனைவியிடம் பேசவேண்டுமென்று நான் கண்ணாடியின் முன்னால் நின்று தயார் செய்து கொண்டிருந்த போது, அவளே நேரில் வந்துவிட்டாள். முற்பகுதியெல்லாம் மறந்து போய்க் கடைசிப் பாராவில் கண்ட விஷயத்தை மட்டும்தான் சொன்னேன். ஆனால், இந்தப் பாழும் ரயில்வே ஸ்ட்ரைக்கைப் பற்றி அவள் தெரிந்து கொண்டிருந்தாள் என்று நான் கண்டேனா?

# மனக்குறை

## விந்தன்

அன்று மாலையும் வழக்கம்போல் ழுது வடியும் முகத்துடன் தான் நாராயண ர்த்தி வீட்டிற்குள் நுழைந்தான். நாடக மடை ராஜா மாதிரி அவன் தன் குமாஸ்தா வடைத்தைக் கலைத்துக் கொண்டிருந்த பாது, "இந்தாருங்கோ!" என்று குரல் காடுத்துக் கொண்டே அவன் மனைவி முதம் அங்கே வந்தாள் — கையில் காப்பி டன் அல்ல; ஏதோ ஒரு ஸிராஹப் பிர வசப் பத்திரிகையுடன்.

"வந்து விட்டாயா, 'இந்......தா...... ங்கோ!' என்று வசந்த காலத்துக் குயில் ாதிரி குரல் கொடுத்துக் கொண்டே?— பா! — பெயரைப் பாரு, பெயரை! முதமாம்! உன்னைச் சுற்றிச் சுற்றி ண்டுகள் சிங்காரம் செய்யாததுதான் ஒரு றை! — உம் ...... உன்னைச் சொல்லி ன்ன பயன்? ஒன்பது வருஷமாக நாலும் ன் பாட்டைத் தலையையும் எண்ணெய் டியும் முகரக் கட்டையையும் பார்த்துக் காண்டு வந்தும், இன்று வரை சந்நியாசம் ாங்கிக் கொள்ளாம லிருக்கிறேனே, தைச் சொல்லு!" என்று தலையில் லசாகத் தட்டிக்கொண்டே ஈஸிசேரில் ாய்ந்தான் நாராயணமூர்த்தி.

"பொழுது விடிந்ததும் வீட்டு வேலை ளை யெல்லாம் செய்வதற்கு நீங்கள் லைக்காரர்களை வைத்திருக்கிறீர்களோ, ல்லையோ — காலையெல்லாம் நாவல் படித் க் கொண்டு சும்மா உட்கார்ந்திருக்கும் ான், சாயந்திரமானால் சிங்காரித்துக் காண்டு குயில் மாதிரி கொஞ்சிக் கொண் ம், மயில் மாதிரி நடை போட்டுக் கொண் ம் உங்கள் முன்னால் வந்து நிற்க வேண்டி து தான்! — அப்படித்தான் நீங்கள் விதம் தமான துணி மணிகள் எடுத்துப் பீரோ றைய அடுக்கி வைத்திருப்பது என்ன கட்டுப் போச்சு? மாற்றிக் கட்டிக் காள்ள மறு புடவைக்கு வழி கிடை ாதே!" என்று குமுதமும் பதிலுக்கு ரிந்து விழுந்து கொண்டே, கையி ருந்த பத்திரிகையை அவன்மேல் வீசி றிந்து விட்டு, அடுப்பங் கரையை நாக்கி நடந்தாள்.

அங்கே, அவளுடைய எட்டு வயதுப் பண்ணை பட்டு, இராத்திரிச் சாப்பாட்டிற்காகப் பொரித்து வைத்திருந்த அப்பளங்களில் ஒன்றை எடுத்து ருசி பார்த்துக் கொண்டிருந்தாள். அந்தச் சாக்கில் அவளுடைய முதுகில் இரண்டு அறை வைத்துத் தன்னுடைய கோபத்தைத் தீர்த்துக் கொண்டாள் குமுதம்.

அதே சமயத்தில், வெளியே விளையாடிக் கொண்டிருந்த பட்டுவின் தம்பியான கிட்டு உள்ளே நுழைந்தான். அவன் சட்டையெல்லாம் ஒரே புழுதி மயமாக இருந்தது. அதை வியாஜமாக வைத்துக் கொண்டு அவனுடைய காதைத் திருகியதன் மூலம் தன்னுடைய ஆத்திரத்தைத் தீர்த்துக் கொண்டான் நாராயணமூர்த்தி.

பட்டுவும், கிட்டுவும் அழுதுகொண்டே வெளியே வந்து வீட்டு வாயிற்படியில் உட்கார்ந்தனர்.

சிறிது நேரத்திற்குப் பிறகு, "அக்கா, அம்மா உன்னை ஏன் அடிச்சா?" என்று கேட்டான் கிட்டு.

"ஒரு அப்பளத்தை எடுத்துத் தின்னு விட்டேனாம், அதற்காக!" என்றாள் பட்டு.

"ஓஹோ ......"

"ஆமாம்; உன்னை ஏன் அப்பா அடிச்சார்?"

"சட்டையை அழுக்காக்கிக் கொண்டு வந்து விட்டேனாம், அதற்காக!"

பாவம், அந்தக் குழந்தைகளுக்குத் தெரிந்த உண்மை அவ்வளவுதான்! — ஆனால், அவர்கள் அறியாத — ஏன், அவர்களைப் பெற்றோரே அறியாத உண்மையொன்றும் இருக்கத்தான் இருந்தது.

அதுதான் இந்தப் பாரத புண்ணிய பூமியிலே பிரசித்தி பெற்று இருக்கும் வறுமை!

அதன் பயனாகத் தங்களுக்குள் ஒரு குற்றமும் இல்லாவிட்டாலும், இன்று எத்தனையோ தம்பதிகள் தங்கள் வாழ்க்கையில் இயற்கையாக நிலவக்கூடிய அமைதியைக் கூடக் குலைத்துக் கொள்ளவில்லையா? — அந்தக் கோஷ்டியைச் சேர்ந்தவர்கள் தான் நாராயணமூர்த்தியும் குமுதமும்!

★

ஆத்திரமெல்லாம் ஒருவாறு அடங்கிய பிறகு, தன்மேல் பரிதாபமாக விழுந்து கிடந்த பத்திரிகையை எடுத்துப் பார்த்தான்

நாராயணமூர்த்தி. அது, அவனுடைய நண்பனான ஹரிகிருஷ்ணனிடமிருந்து வந்திருந்தது.

அவ்வளவுதான்; அவனுக்கு மீண்டும் ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்து விட்டது.

நேற்று வரை அவனும் தன்னைப்போல் வாடகை வீட்டில் குடித்தனம் செய்து கொண்டு வந்தவன்தான் — இன்று ......?

'ஜாம், ஜாம்' என்று தன்னுடைய சொந்த வீட்டில் — சகல சௌகரியங்களும் பொருந்திய புத்தப் புது வீட்டில் — அவன் குடித்தனம் செய்யப் போகிறான்!

பார்க்கப் போனால், இதற்காக அவன் செய்ததுதான் என்ன? — ஒன்றுமில்லை. தனக்கு வீடு தேவையா யிருப்பதால் உடனே காலி செய்து கொடுக்க வேண்டுமென்று வீட்டுக்காரன் அவனுக்கு மூன்று மாத 'நோட்டீஸ்' கொடுத்தானாம். இந்த விஷயத்தை அவனுடைய வெட்டகத்தார் கேள்விப்பட்டார்கள் — அதன் பலன்?

மூன்று மாதத்திற் கெல்லாம் தன்னுடைய சொந்தச் செலவிலேயே ஒரு அழகான வீட்டைக் கட்டி முடித்து, அதை அவன் பேரிலேயே எழுதி வைத்து விட்டார் மாமனார்! — கொடுத்து வைத்தானும் இப்படியல்லவா கொடுத்து வைக்க வேண்டும்?

உம் ...... உலகத்தில் எத்தனையோ பேருக்கு இப்படியெல்லாம் நடக்கிறது. தனக்கோ ......?

தன்னைவிட 'தரித்திரம்'தான் ஒன்று வந்து வாய்த்திருக்கிறது!

மாற்றிக் கட்டிக் கொள்ள மறு புடவைக்கு வழி கிடையாதாம் — அவனு... வெட்கமில்லாமல் சொல்லிக்கொள்கிறானே

“எனக்கும் கல்யாணமாகி ஏழு வருஷமாகிறது. இதுவரை நான் என் மனைவிக்குப் புடவையோ, ஜாக்கெட்டோ — ஒன்றும் எடுத்துக் கொடுத்தது கிடையாது. இன்று வரை அவள் கட்டுவதெல்லாம் அவளுடைய அப்பா எடுத்துக் கொடுப்பது தான்!” என்று சொல்லி, அன்று ஹரி தன்னிடம் என்னமாய்ப் பெருமை யடித்துக் கொண்டான்!

இங்கே என்னடா என்றால் எல்லாவற்றுக்கும் தன்னுடைய கழுத்தை அறுப்பதாக வந்து தொலைந்திருக்கிறதே! — எல்லாம் என் தலையெழுத்து!

உம் ...... தலையெழுத்தாவது மண்ணாங்கட்டியாவது? — அவன் முன் யோசனையோடு 'நல்ல இட'மாகப் பார்த்துக் கல்...



யாணம் செய்து கொண்டான்; அதிர்ஷ்டமும் தானே கதறிக் கொண்டு அவனை வந்து சேர்ந்தது.

நானோ......?

காதலென்றும், கத்திரிக்கா யென்றும் சொல்லிக் கொண்டு கவைக்குதவாத ஒருத்தியின் கழுத்தில் மாலை யிட்டேன். அதன் பலன்? — இன்று நானும் அழுது வடிகிறேன்; அவளும் அழுது வடிகிறாள்!

அவனுடைய அர்த்தமில்லாத சிந்தனை அத்துடன் முடியவில்லை; இன்னும் மேலே மேலே சென்று கொண்டிருந்தது.

★



தன் கணவனின் மனக் குறையைக் குமுதமும் ஒருவாறு அறிந்துதான் இருந்தாள். ஆனாலும் அவள் இப்போது என்ன செய்வாள்?

பிறந்தகத்தின் நிலையை உத்தேசித்து, பின்னால் புக்ககத்தாரிடம் கேட்கப்போகும் வசவுகளையும் முன்னாலேயே ஒருவாறு உணர்ந்து, அவள் முதலில் தனக்குக் கல்யாணமே வேண்டாம் என்றுதான் தன் பெற்றோரிடம் முறையிட்டுக் கொண்டிருந்தாள். அவர்களும் தங்கள் நிலையை உணர்ந்து, கல்யாண விஷயத்தில் அவளை அவ்வளவாக வற்புறுத்தாமல்தான் விட்டிருந்தார்கள். ஆனால், இரண்டு குடும்பங்களும் நெருங்கிப் பழக நேர்ந்ததின் காரணமாக, நாராயணமூர்த்திக்கும் குமுதத்திற்கும் இடையே நேசம் வளர்ந்தது. காவியங்களில் காணும் காதல் எல்லாம் வெறும் கற்பனை என்பதை அந்த ஜீவன்கள் உணரவில்லை. வாழ்க்கையில் அவன் கல்யாணம் ஆகுமுன், 'கண்ணே, மணியே, கற்கண்டே!' என்றதெல்லாம் ஒரு குழந்தை பிறக்கும் வரைதான் இருக்கும் என்பதைக் குமுதம் அப்போது எதிர்பார்க்கவில்லை; ஏமாந்து போனாள்.

குமுதத்தின் பெற்றோரும், நல்ல வேளையாக நாராயணமூர்த்திக்குத் தாயார், தகப்பனார் இல்லாததைக் கண்டு ஒருவாறு திருப்தி யடைந்தனர். ஏனெனில், "பின்னால் ஏதாவது ஏசிக் காட்டுவதாயிருந்தாலும் அவர்கள் இருந்தால்தானே!" என்று அவர்கள் நினைத்தனர். அதற்கேற்றாற்போல் நாத்தனார் என்று சொல்லிக் கொள்வதற்கும் யாரும் இல்லை. எல்லாவற்றுக்கும் மேலாக, நாராயணமூர்த்தியின் சித்தப்பாவும், சித்தியும் கல்யாணமானதும் அவர்களைத் தனிக் குடித்தனம் வைத்து விடுவதாக வாக்குறுதி கொடுத்தனர். ஆகவே, இவ்வளவு சௌகரியமான இடம் போனால் வாராது என்று எண்ணியவர்களாய்க் குமுதத்தின் பெற்றோர், கடனோடு கடனாகக் கலியாணத்தைத் தங்கள் சக்திக்கு ஏற்றவாறு சீக்கிரத்திலேயே செய்து முடித்து விட்டனர்.

பாவம், ஸ்ரீமந் நாராயணமூர்த்தியைப் போலவே இந்த நாராயணமூர்த்தியும், நாத்தனாராகவும் மாமியாராகவும் மாமனாராகவும் பின்னால் அவதாரம் எடுப்பான் என்பதை அவர்கள் கண்டார்களா? இல்லை, குமுதம்தான் கண்டாளா?

★

அன்று ஒரு இருபத்தைந்து ரூபாய் கடன் கேட்டு வாங்கி வரலாமென்று ஹரிகிருஷ்ணன் வீட்டிற்குப் போயிருந்தான் நாராயணமூர்த்தி. என்று மில்லாதபடி அன்று வீட்டிற்குள் நுழையும்போதே ரேடியோவின் அலறல் அவன் காதில் விழுந்தது. அவனும் அதற்கு முன்னால் எத்தனையோ முறை ஹரிகிருஷ்ணன் வீட்டிற்கு வந்திருக்கிறான்; ரேடியோவின் அலறலைக் கேட்டது கிடையாது!—இன்று...?

அவனுக்கு ஏது ரேடியோ?

"அடேயப்பா! தன்னைப் போல் மாதம் எழுபத்தைந்து ரூபாய் சம்பளம் வாங்கும் இவன் என்னவெல்லாம் செய்கிறான்!" என்று எண்ணிக் கொண்டே உள்ளே நுழைந்த அவனை, "என்ன, ஸ்ரீமந் நாராயணமூர்த்தி! ஒரு முறையாவது 'மகாலக்ஷ்மி'யுடன் நம் வீட்டிற்கு விஜயம் செய்யக் கூடாதா?" என்று கேட்டுக் கொண்டே வரவேற்றான் ஹரிகிருஷ்ணன்.

"மகாலக்ஷ்மியில்லை; அவளுடைய அக்கா!" என்று தனக்குள் முணுமுணுத்துக் கொண்டே சுற்றுமுற்றும் பார்த்தான் நாராயணமூர்த்தி.

அங்கங்கே காணப்பட்ட வெள்ளிப் பாத்திரங்களும், விதம் விதமான மேஜை, நாற்காலி, 'ஸோபா'க்களும் அவனுடைய ஆத்திரத்தை மேலும் தூண்டி விட்டன. அவற்றைப் பார்க்கப் பார்க்க அவனுக்குத் தன் வேட்டகத்தாரின் மீது கோபம் கோபமாய் வந்தது.

அடுத்த நிமிஷம் 'கம்' மென்ற மல்லிகை மணம் அவன் கவனத்தைக் கவர்ந்தது. அத்துடன் புத்தம் புதுப் பட்டாடை கட்டி நடப்பதனால் உண்டாகும் 'சலக், சலக்' என்ற சத்தமும் அவன் காதில் விழுந்தது. திரும்பிப் பார்த்தான்; சாட்டை போன்ற பின்னலை முன்னால் எடுத்துப் போட்டுக் கொண்டு, முகத்தில் முல்லையின் முறுவலுடன் லாகவமாக நடந்து வந்தாள் ஸ்ரீமதி ஹரி.

"இவளும் பெண்தானே, பார்ப்பதற்கு எவ்வளவு லட்சணமாயிருக்கிறாள்!" என்று தனக்குள் எண்ணி ஏங்கினான் நாராயணமூர்த்தி.

அதற்குள் காப்பி வந்து சேர்ந்தது. அதை எடுத்துச் சாப்பிட்டுக் கொண்டே, "என்ன, ஹரி! இந்த ரேடியோவை எப்போது வாங்கினாய்?" என்று தன் ஆவலை அடக்க முடியாமல் கேட்டுவிட்டான் நாராயணமூர்த்தி.

"உம் ...... நானாவது, வாங்கவாவது! சென்ற வாரம் இவளுடைய அப்பா இங்கே வந்திருந்தார். 'சாயந்திரமானால் பொழுது போவது சிரமமாயிருக்கிறது' என்று அவரிடம் ஒரு வார்த்தை சொன்னேன். அதற்காக இந்த ரேடியோவை வாங்கி வைத்திருக்கிறார்!" என்றான் ஹரி பெருமையுடன்.

இதைக் கேட்டதும் எரிகிற தீயில் எண்ணெய் விட்டது போலிருந்தது நாராயணமூர்த்திக்கு. ஆனாலும் அதை வெளியே காட்டிக் கொள்ளாமல், வந்த காரியத்தை முடித்துக்கொண்டு தன் வீட்டுக்குப் புறப்பட்டு விட்டான்.

*

இந்தச் சம்பவம் நடந்த இரண்டு மூன்று மாதங்களுக்குப் பிறகு, ஒரு நாள் சாலையில் பஸ்ஸுக்காகக் காத்துக் கொண்டிருந்தான் நாராயணமூர்த்தி. "சோ, ரூம், சோ, ரூம்!" என்ற கண்டக்டர்களின் ஓயாத ஓலத்தைக் கேட்டுக் கேட்டு அலுத்துப் போன சமயத்தில், 'திடுதிப்' பென்று மோட்டார் சைக்கிளில் வந்து அவனுக்கு முன்னால் நின்ற ஹரிகிருஷ்ணன், "என்ன, நாராயணமூர்த்தி! பஸ்ஸுக்காகவா காத்துக் கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டான்.

"ஆமாம்" என்று சொல்லக் கூட வாயெடுத்துப் போய், அவனையும் அவன் ஏறி வந்த புத்தம் புது மோட்டார் சைக்கிளையும் ஏற இறங்கப் பார்த்தான் நாராயணமூர்த்தி.

"என்ன, பார்க்கிறாய்? உன்னைப்போல் தான் நானும் தினசரி இந்தப் பாழாய்ப் போன பஸ்ஸுக்காகக் காத்துக் காத்துப் பார்த்துப் போதும் போதும் என்று ஆகி விட்டது. கடைசியில், என் மாமனார்தான் இந்த மோட்டார் சைக்கிளை வாங்கிக் கொடுத்து, என்னுடைய கஷ்டத்தைத் தீர்த்து வைத்தார்!" என்றான் ஹரி.

"என்ன இருந்தாலும் நீ கொடுத்து வைத்தவன்தான்!" என்றான் நாராயணமூர்த்தி தன்னையும் மீறிவந்த வயிற்றெரிச்சலுடன்.

அதைக் கவனிக்காத அப்பாவி ஹரி, "எங்கே போகப் போகிறாய்? ஆபீஸுக்குத் தானே? பின்னால் ஏறிக் கொள்ளேன், கொண்டு போய் விட்டு விடுகிறேன்" என்றான்.

நாராயணமூர்த்தியும் இயற்கையாகவே அழுது வடியும் முகத்தை இன்னும் அதிகமாக அழுது வடிய வைத்துக்கொண்டு, பின்னால் ஏறிக் கொண்டான். மோட்டார் சைக்கிளும் காற்றாய்ப் பறந்தது.

வழியெல்லாம் ஹரிகிருஷ்ணன் 'வளவள' வென்று நாராயணமூர்த்தியிடம் என்னவெல்லாமோ பேசிக் கொண்டு வந்தான். அவையெல்லாம் அவனுடைய காதில் விழவேயில்லை. அவன் மனமெல்லாம் குமுதத்தையும், அவளுடைய அப்பாவையும் சபிப்பதிலேயே ஈடுபட்டிருந்தது. ஆபீஸில் தன்னைக் கொண்டு வந்து சேர்த்த ஹரிகிருஷ்ணனுக்கு 'தாங்ஸ்' என்று ஒரு வார்த்தை சொல்லக்கூட அவனுடைய ஆத்திரம் இடம் கொடுக்கவில்லை. வாடிய முகத்துடனும், வேதனை நிறைந்த உள்ளத்துடனும் அன்று எப்படியோ வேலையைக் கவனித்துவிட்டு, வீடு வந்து சேர்ந்தான்.

"இன்றைக்கு விறகு ரேஷன் வாங்க வேண்டுமே, காசு கொடுக்காமல் போய் விட்டீர்களே!" என்றாள் குமுதம்.

அவ்வளவுதான்; "விறகுதானே வேண்டும்!" என்று சொல்லி, ஏற்கெனவே ஒரு கால் ஒடிந்து கிடந்த சவிசேரைத் தூக்கி அவளுக்கு முன்னால் விட்டெறிந்தான் நாராயணமூர்த்தி.

அது அக்கு வேறு, ஆணி வேறாக உடைந்து விழுந்தது. அத்துடன் குமுதத்தின் உள்ளமும் சுக்கு நூறாக உடைந்து விட்டது.

"என்னை ஏன் இப்படியெல்லாம் வதைக்கிறீர்கள்? உங்களுக்குப் பிடிக்கவில்லையென்றால் சொல்லி விடுங்களேன், நாளைக்கே நான் இந்த வீட்டை விட்டுப் போய் விடுகிறேன்!" என்றாள் அழுகையும் ஆத்திரமும் கலந்த குரலில்.

"அட, சனியனே! நீ மட்டுமா போகப் போகிறாய்? உன்னுடன் கொண்டு வந்த வெள்ளிப் பாத்திரங்கள், மரச் சாமான்கள், ரேடியோ, மோட்டார் சைக்கிள், வீடு வாசல் எல்லாம் என்ன கதியை அடைவது? அவற்றையும் கையோடு எடுத்துக் கொண்டு போ!" என்று ஸ்ரீமதி ஹரியை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு அவளைப் பரிகாசம் செய்தான் நாராயணமூர்த்தி.

"பிறந்தியார் சொத்துக்கு ஏன் இப்படி வாயைப் பிளக்கிறீர்களோ, தெரியவில்லையே! உங்களுடைய கையால் ஒன்றுமே ஆகாதா? என்னைப்போல் பிறந்தகத்திலிருந்து ஒன்றுமேயில்லாமல் வந்த எத்தனையோ பெண்கள் இன்று புக்ககத்தில் என்னை விட மேலாக வாழவில்லையா? கைபிடித்த கணவனின் மூலமாகவே எல்லாவிதமான சுகபோகங்களையும் அடையவில்லையா? ஹரிகிருஷ்ணனுக்கு அவருடைய வேட்டகத்தாரிடமிருந்து எல்லாம் கிடைக்கிறதென்று நீங்கள் ஆத்திரப் படுகிறீர்களே, அடுத்த வீட்டு அமிர்தத்துக்கு அவள் அகமுடையான் வீட்டிலிருந்தே எல்லாம் கிடைத்து வருகிறதே, அதற்காக நானும் வேண்டுமானால் உங்களைப் போல் ஆத்திரப்படக் கூடாதா? 'எனக்கு அது வேண்டும், இது வேண்டும்' என்று எந்நேரமும் உங்களை நச்சரிக்கக் கூடாதா? வேட்டகத்தாரிடமிருந்து ஒன்றும் கிடைக்கவில்லையே என்று உங்களுக்கு இருக்கும் மனக் குறைபோல், புக்ககத்தாரிடமிருந்து ஒன்றும் கிடைக்கவில்லையே என்ற மனக் குறை எனக்கும் இருக்காதா?" என்று அத்தனை காலமும் தன் அகத்தில் அடக்கி வைத்துக் கொண்டிருந்த ஆத்திரத்தையெல்லாம் அள்ளி அள்ளிக் கொட்டிக் கொண்டே போனாள் குமுதம்.

அவள் வாயைப் பார்த்தபடியே தன் வாயைப் பிளந்துகொண்டு நின்றான் நாராயணமூர்த்தி.

அத்தனை நாளும் அவனுடைய உள்ளத்தில் உதயமாகாத ஒரு உண்மை அன்று உதயமாயிற்று.

"மனக் குறை என்பது ஆணுக்கு மட்டும் அல்ல; பெண்ணுக்கும் உண்டு!" என்பதை அவன் அன்றே உணர்ந்தான்.

அவ்வளவுதான்; அவனுடைய மனம் மாறி விட்டது. "குமுதம்! நீ கொடுத்து வைக்காதவள்!" என்றான் நாத் தழுதழுக்க.

"நீங்களும்தான்!" என்றாள் குமுதம், கண்ணீரைத் துடைத்துக் கொண்டே.

---

# கல்கி சிறுகதைப் போட்டி

•

1946-ம் வருஷத்துக் கல்கி சிறுகதைப் போட்டியின் விதிகள் ஏற்கெனவே பிரசுரமாகியிருக்கின்றன. அதற்காக நியமிக்கப்பட்டிருக்கும் பஞ்சாயத்தாரின் பெயர்கள் பின்வருமாறு:—

(1) ஸ்ரீ பொ. திருகூட சுந்தரம் பிள்ளை; (2) ஸ்ரீ தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்; (3) ஸ்ரீ என். ராமஸ்வாமி, (ஆபீஸர்); (4) ரஸிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார்; (5) ஆசிரியர், "கல்கி."

எழுத்தாள நண்பர்கள் போட்டி முடிவு தேதியான 30-9-46க்குள் தங்கள் சிறுகதைகளை அனுப்பி வைத்து விடுமாறு கோருகிறோம்.

•

மானேஜர், "கல்கி", கீழ்ப்பாக்கம், சென்னை

# நாய் வளர்த்த பூனைக் குட்டி

ராஜி



ஒரு நாய் ஒரு பூனைக் குட்டியைத் தன் குழந்தையைப் போல் வளர்த்து வந்தது. நாய் நல்ல குணமுள்ளதாயிருந்ததால் பூனைக் குட்டிக்கும் நல்ல பழக்க வழக்கங்களைச் சொல்லிக் கொடுத்தது.

ஒரு நாள் அந்த நாயின் வீட்டில் பெரிய விருந்து நடந்தது. அன்று பூனைக் குட்டி தோட்டத்துப் பக்கம் சென்று, அவசரம் அவசரமாக ஒரு மரத்தில் ஏற ஆரம்பித்தது. அதைப் பார்த்த நாய் ஓடோடியும் வந்து, "ஏன் மரத்தின் மேல் ஏறுகிறாய்? அங்கே உட்காரும் பறவைகளைத் துரத்துவதற்கா? பறவைகளிடத்தில் அன்பாக இருக்க வேண்டும் என்று நான் பலமுறை சொல்லியும் நீ கேட்கமாட்டேன் என்கிறாயே! உன்மீது நான் ஆசையாக இருப்பது போல் நீயும் பறவைகளிடம் ஆசையாக இருக்க வேண்டும்" என்று சொல்லி, பூனையின் காதைப் பிடித்துக் திருகிற்று.

உடனே பூனைக்குட்டி 'திரு திரு' வென்று விழித்துக் கொண்டே கீழே இறங்கி, நாலு கால் பாய்ச்சலில் உள்ளே சென்றது. பறவைகளிடத்தில் தான் மிகவும் அன்பாக இருப்பதைப் பற்றித் தன்னைத் தானே மெச்சிக் கொண்டு, நாய் தோட்டத்தில் உலாவ ஆரம்பித்தது. அப்பொழுது மரத்தில் தனித் தனியாக உட்கார்ந்திருந்த காக்கைகள் திடீரென்று ஒன்று சேர ஆரம்பித்தன. 'கா, கா. கா!' என்று பலத்த சத்தமிட்டு, அவை மேலே பறந்து கொண்டிருந்த மற்றக் காக்கைகளையும் அழைத்தன.

நாய்க்கு ஒன்றும் புரியவில்லை; இப்படியும் அப்படியுமாகத் திரும்பித் திரும்பிப் பார்த்தது. மரத்திலிருந்த காக்கைகள் ஒன்று கூடி, நாய் இருக்கும் இடத்திற்கு மெதுவாகப் பறந்து வந்தன. நாய்க்குச் சற்றுப் பயம் உண்டாயிற்று. தன் கோபத்தைக் காட்ட அது பல்லைக் காட்டிற்று. அப்படியும் காக்கைகள் தன்னைச் சுற்றிச் சுற்றிப் பறக்கவே அது தன் வாலை நிமிர்த்தி, தனக்குக் கோபம் பிரமாதமாக வந்து கொண்





இருப்பதை அவைகளுக்கு வருத்தத்துடன் தெரியப் படுத்திற்று.

அதற்கும் காக்கைகள் பயந்ததாகத் தெரியவில்லை. அவை சேர்ந்தாற்போல் நாயை நெருங்கி, அதன் முகத்தை மூக்கினால் கொத்த ஆரம்பித்தன. பாவம், ஒரே சமயத்தில் அத்தனை காக்கைகள் தன்னுடன் சண்டைக்கு வந்தால் நாய் என்ன செய்யும்! — இப்படியும் அப்படியுமாக முகத்தைத் திருப்பித் திருப்பிச் சற்று நேரம் சமாளித்துப் பார்த்தது; முடியவில்லை. ஆகவே ஒரே ஓட்டமாக உள்ளே ஓடி, கதவைத் தாளிட்டுக் கொண்டது.

"காக்கைகளைத் துரத்தப்போன பூனைக் குட்டியைத் தடுத்து நிறுத்தியதன் பலன் இது!" என்று வருத்தப்பட்டுக் கொண்டே நாய் நாற்காலியில் உட்கார்ந்தது. இதைக் கேட்டுக் கொண்டிருந்த பூனைக் குட்டி, "நீங்கள் காக்கைகளைக் கோபித்துக் கொள்ள வேண்டாம்; தப்பு என்மீதுதான்!" என்று சொல்ல, நாய் ஆவலுடன் "அது எப்படி?" என்று விசாரித்தது.

"இன்று நம் வீட்டில் விருந்துக்காக ஜிலேபி பண்ணியிருந்தோமல்லவா? அதில் ஒன்றை எடுத்துக் கொண்டு, யாருக்கும் தெரியாமல் தின்பதற்காக நான் மரத்தின் மேல் ஏறினேன். அதற்குள் நீங்கள் வந்து என்னைக் கண்டித்தீர்கள். நான் பயந்து போய்க் கீழே இறங்கிய அவசரத்தில் அந்த ஜிலேபி தவறி விழுந்து தங்கள் காதில் மாட்டிக் கொண்டது. திருடிய ஜிலேபியாதலால் நானும் அதைப் பற்றித் தங்களிடம் ஒன்றும் சொல்லவில்லை; நீங்களும் கவனிக்கவில்லை. நான் உள்ளே ஓடி வந்துவிட்ட பிறகு, நீங்கள் அப்படியே தோட்டத்துக்குப் போயிருக்கிறீர்கள். காக்கைகள் யாவும் அந்த ஜிலேபியைத் தின்பதற்காகத்தான் தங்களைச் சுற்றிச் சுற்றி வட்டமிட்டுப் பறந்தனவே தவிர, தங்களைக் கொத்துவதற்காக அல்ல!" என்றது பூனைக் குட்டி.

"அப்படியா விஷயம்!" என்று நாய் தன் முகத்தில் அசடு வழியச் சொல்லிக்கொண்டே, காதில் மாட்டிக் கொண்டிருந்த ஜிலேபியை எடுத்து, "இந்தா, இதை நீயே எடுத்துக் கொள்; இனிமேல் திருடாதே!" என்று பூனைக் குட்டியிடம் கொடுத்தது.

பூனைக் குட்டி மிகவும் சந்தோஷத்துடன் அதை வாயில் கவ்விக் கொண்டு ஓட்டமெடுத்தது.

---

## பேரனுக்கு!



கடைக்காரன்:—இந்தத் துணியை வாங்கிக் கொண்டு போங்கள், உங்கள் ஆயுசு மட்டும் உழைக்கும்!

கிழவர்:—என் ஆயுசு மட்டும் உழைத்தால் போதாதே. என் பேரனுக்கல்லவா துணி வாங்க வந்திருக்கிறேன்!

# வான சஞ்சாரம்

இசைத் தேனீ



நாகஸ்வரக் கலையுலகில் தற்காலம் மிகப் பிரபல்யம் பெற்றுத் தலைவர்களாய் விளங்கும் இரண்டு பெரிய வித்வான்களில், திருவிடைமருதூர்ப் பி. எஸ். வீருசாமிப் பிள்ளை ஒருவர். அவரது கல்யாணமான குணத்துக்கும் தொழில் முறைக்கும் ஒத்ததாகவே அவரது கலையும் கனிவானது. ராகங்களைப் பாணி வளப்பமுடன், சுவைப்படக் கொடுப்பதோடு ஸ்வர வாசகங்களாய்ப் பொழிவதில் வல்லவர். 16-ம் திருச்சியில் அமைந்த அவரது கச்சேரி அதற்கு அத்தாட்சி. பல்லவி ராகமாலிகையாய் விஸ்தாரமாயும் அதிக வேலைப்பாடுகளுடனும் மனம் கவர்ந்தது. கல்யாணியும், பைரவியும், உருப்படிகளும் பாணி பழகுகை நன்கு வெளிப்படுத்தின. அன்று அவர் வயலினையும், மிருதங்கத்தையும் தன் குழுவுக்குப் பக்க வாத்யங்களாய் அமைத்துக் கொண்டதே விசேஷம். தம்பூரா சுருதிக்கு ஏற்றவாறு குழல் நாதத்தை அடக்கி இனிமையாய்க் கொடுப்பதில், வேறு இரண்டு பிரபல வித்வான்கள் வெகுநாளாய்ப் பழக்கத்துடன் கைதேர்ந்தவர்களாயிருக்கிறார்கள். வீருசாமிப் பிள்ளையவர்களுக்கு இது புதிது என்பது அன்றைய வாசிப்பிலிருந்து தெரிந்தது. குழல் ஒலியை அடக்கிச் சன்னமாய் விடும் முயற்சி சில இடங்களில்தான் பயன் கொடுத்தது.

நாகஸ்வரத்தை எவ்வளவு அடக்கி வாசித்தாலும் அதன் கனிப்பில் வயலின் போன்ற எந்தப் பக்க வாத்யமும் சேர்ந்து வாசிக்கும்போது காதில் விழாது. எனவே போஷணை கொடுக்க உபயோகப்படாது. இடையிடையே சிரம பரிகாரத்துக்காகத் தான் உபயோகமாகும். மேலும் நாதஸ்வரத்துக்கு இயற்கையாய்த் தொன்று தொட்டு அமைந்திருக்கும் பக்க வாத்யம் தவில். இக்காலத்தில் அதைக்கூட அடக்கி மிருதுவாய் வாசிக்கும் பழக்கம் சிலரிடம் வந்திருக்கிறது. எனவே, மிருதங்கம் போன்ற வேறு பக்க வாத்யம் அவ்வளவு அவசியமா என்ற கேள்வி பிறக்கலாம். இவைகளெல்லாம் அன்றையக் கச்சேரியைக் கேட்டதிலிருந்து எழுந்த சில ஆலோசனைகளே தவிர, நாகஸ்வரக் கலைக்கு வரம்பு கட்ட வேண்டும் என்ற எண்ணமில்லை.

15-ம் சென்னையில் வீணைக் கச்சேரி செய்த தேவகோட்டை நாராயணய்யங்கார் அவ் வாத்யத்தை உயர்ந்த முறையில் கையாளும் மிகச் சில வித்வான்களில் ஒருவர். மீட்டு நாதத்துக்கும் கமகப் பொழிவும் கொண்டு அடாணா, தோடி ராகங்களையும் உருப்படிகளையும் வாசித்தார். சுவைப்புக்கு இடம் கொடாத இத்தகைய சிறந்த வித்வான்களின் கச்சேரிக்கு எவ்வளவு நேரம் கொடுத்தாலும் தகும்.

18-ம் சென்னையில் நடந்த ஸ்ரீமதி ருக்மணி ராஜகோபாலனின் ஒரு மணி நேரக் கச்சேரி எதிர்பார்த்ததுபோல் உயர்ந்த ரகமாயிருந்தது. கற்றறிந்த சஞ்சார சங்கதிகளைத் தெளிவாயும், பாவத்தைப் பொருத்தங்களுடனும் அமைத்து ராகங்களையும் உருப்படிகளையும் வழங்கினர். ஆனந்த பைரவியும், விஸ்தாரமாய் ஆலாபனை செய்த கல்யாணியும், உருப்படிகளும் அவரது பாணி பழகுகை நன்கு வெளிப்படுத்தின. அன்று பாடியவைகளில், 'ஏவரமடுகுது' இறுதியில் விழுந்த நிரவல்களைத் தவிர மற்றதெல்லாம் அளவுக்கு மேற்பட்ட நிதானத்துடனும் சற்று இழுப்பாயும் கேட்டன.

• • •

சென்னையில் 15-ம் எம். நீலகண்டய்யர், 16-ம் ராஜம் வைத்யநாதன் இவர்களின் கானங்கள் உயர்ந்த ரகமாயிருந்தன. முன்னவரது ஸிம்மேந்திர மத்யமும், பின்னவரது ஷண்முகப்ரியாவும் தரமாயிருந்தது.

16-ம் சென்னையில் கேட்ட என். ராஜரத்தினத்தின் வயலின் கச்சேரி சுத்தமாயும் ஒழுங்கு முறை கொண்டதாயுமிருந்தது. வசந்தா, காம்போதி, நாதநாமக்கிரியா ராகங்கள் இழைந்து வந்தன. உருப்படிகள் கெட்டியாயிருந்தன.

18-ம் திருச்சியிலிருந்து கேட்ட கல்லிடைக் குறிச்சி என். லக்ஷ்மியின் கச்சேரி குறிப்பிடத் தக்கது. சாரீர நயமும், சுருதிபடியும், நல்ல தேர்ச்சியும் கொண்டு வசந்தா, கல்யாணி, ஸ்ரீரஞ்சனி ராகங்களையும் உருப்படிகளையும் சரளமாக வழங்கினர்.

# நண்பர்களுக்கு முதல்தரமானது



எந்த சமயமானாலும் சரி, டீக்கு முதன்மை ஸ்தானம் நிச்சயம். இரண்டு மூன்று பழைய நண்பர்கள் ஒன்று சேர்ந்தாலும் சரி, பெரிய கூட்டமானாலும் சரி எல்லோருக்கும் உற்சாகத்தை அளிக்கவல்லது டீ.

எல்லா விஷயங்களிலும் உள்ளதுபோலவே, டீ தயாரிப்பதிலும் சரியான, தப்பான வழிகளுண்டு. விருந்தினர் விரும்புவது மிகச் சிறந்த பொருள்கள் தான். ஆகையால் விருந்தளிப்பவர் நல்ல டீ தயாரிக்கும் முறையையே எப்பொழுதும் பின் பற்றுவார்.

## நல்ல டீ தயாரிக்கும் முறை

1. கெட்டிலில் டீ காய்ச்சக்கூடாது. டீ பாத்திரத்தை உபயோகியுங்கள்.
2. உலர்ந்த டீயை பாத்திரத்தில் போடும்போது பாத்திரம் ஈரமில்லாமல் இருக்கவேண்டும். அப்போதுதான் நறுமணமுள்ள கஷாயம் கிடைக்கும்.
3. ஆளுக்கு ஒரு டீ ஸ்பூன் வீதமும், பாத்திரத்துக்காக ஒரு டீ ஸ்பூனும் டீ போடவும்.
4. புதிதாக காய்ச்சிய நீரையே உபயோகிக்கவும். ஒருதரம் காய்ச்சிய நீரையோ, அதிகமாகவோ அல்லது குறைவாகவோ காய்ச்சப்பட்ட நீரையோ ஒருபோதும் உபயோகிக்காதீர்கள். நன்கு பொங்கி குமிழி விட்டு கொதிக்கும் நீர்தான் சரியாக காய்ச்சின நீர்.
5. கஷாயம் இறங்க குறைந்தது 5 நிமிஷ கால நேரம்வேண்டும்.
6. பாத்திரத்தில் இருக்கையிலேயே பால் சர்க்கரை சேர்க்காதீர்கள். கப்புகளில் விட்ட பிறகு சேர்க்கவும்.



எந்தநேரமும் டீ அருந்தும்நேரம்

இந்தியன் டீ மார்க்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டால் வெளியிடப்பட்டது




மிக நேர்த்தியான மணமும், நல்ல நிறமும், குறைந்த விலையும் உள்ள லிப்டன்ஸ் வெள்ளை லேபில் தேயிலைகள் இதர தேயிலைகளை விட சிறந்தவை.




# லிப்டன்ஸ்

## வெள்ளை லேபில்

நேர்த்தியான இந்திய தேயிலை



# யசோதாரா

ஆசிரியர் : விச்வம்பரநாத் கௌசிக்

மொழிபெயர்ப்பு : ரா. வீழிநாதன்

9

இரவு சுமார் ஏழு மணி இருக்கும்.
ிசபுரத்து வயோதிகரான ஜமீன்தார்,
து ஆஸ்தான மண்டபத்தில் உட்
ந்து கொண்டு, கிராமத்து மக்கள்
ருடன் பேசிக் கொண்டிருந்தார். பேச்சு
ில் ஒருவன், "நந்து என்ன ஆனானோ,
ரியவில்லை" என்று பழைய ஞாபகத்
க் கிளறிவிட்டான்.

்துவின் தந்தை ஒரு நீண்ட பெருமூச்
ன், "என்ன ஆனால் என்ன? குடும்பத்
க் குட்டிச் சுவராக்கி விட்டு எங்கேயோ
ிலைந்து விட்டான்! உயிரோடுதான்
க்கிறானோ, அல்லது செத்துத்தான்
ிலைந்தானோ, யார் கண்டது?" என்றார்.

அப்படியெல்லாம் சொல்லாதீர்கள்,
ா! அவன் எங்கேயாவது சுகமாகக்
ம் கழித்துக் கொண்டுதான் இருப்
!" என்றான் அதே பழைய ஆசாமி.
அவன் இருந்தால் ஒரு கடிதாசி கூடவா
ட்டிருக்க மாட்டான்?" என்று சந்தே
தைக் கிளப்பி விட்டான் இன்னொருவன்.

'டாகுருக்குப் பிறகு குடும்பத்துக்கு
ச யார்?' என்று நினைக்கும்பொழுது
எனக்கு வருத்தமாக இருக்கிறது!"
றான் மற்றொருவன்.

அந்தப் பேச்சு எதற்கு அப்பா இங்கே?
சக்கு ரொம்பக் கஷ்டமாயிருக்கிறது.
ுன் எண்ணப்படித்தானே எல்லாம்
ும். பூர்வ ஜன்மத்திலே செய்த
த்துக்குப் பலன் அனுபவித்துத்தானே
ேண்டும்" என்றார் ஜமீன்தார்.
நீங்கள் சொல்வதும் உண்மைதான்!"
ப்படிப் பேச்சு நடந்து கொண்டிருக்கும்
ழுதே மனோஹர் அங்கு வந்து சேர்ந்
. ஜமீன்தாரின் காலைத் தொட்டு
ங்கினான். கிழவர் அவனை ஆசிர்வதித்து
, "எப்பொழுது அப்பா வந்தாய்?"
கேட்டார்.
மத்தியானம் வந்தேன்."

"சௌக்கியம்தானே?"

"ஓ! எல்லாரும் சௌக்கியந்தான்!"

"லீவில் வந்திருக்கிறாயோ?"

"ஆமாம், ஒரு வாரம் லீவில் வந்திருக்கிறேன்."

"ஏதாவது விசேஷமுண்டா?"

"ஒன்றுமில்லை; ஆனால் உங்களுக்கு ஒரு நல்ல செய்தி......"

மனோஹர் வாக்கியத்தை முடிப்பதற்குள்ளேயே எல்லாரும் ஆவலுடன், "என்ன?" என்று ஒரே குரலாய்க் கேட்டனர்.

"நந்துவைப் பார்த்தேன்" என்றான் மனோஹர்.

ஜமீன்தார் வெகு ஆவலுடன், "நந்துவைப் பார்த்தாயா? நிஜமாகவா? எங்கே?" என்று கேட்டார்.

"பார்த்தாயா, நான் சொன்னது பலித்து விட்டது!—என் மனோஹர், நீ அவனை எங்கே பார்த்தாய்?" என்று கேட்டான் முதல் ஆசாமி.

"சொல்வதற்குள் அவசரப்படுகிறாயே! லக்னெளவில்தான் பார்த்தேன். நான் கடை வாசலில் நின்று கொண்டிருந்தேன். ஒரு வேளை நந்துதானோ இல்லையோ என்று கூடச் சந்தேகப்பட்டேன். இருந்தாலும் சந்தேகத்தைத் தீர்த்துக்கொள்ள எண்ணி, பெயரைச் சொல்லிக் கூப்பிட்டேன்; திரும்பிப் பார்த்தான். என்னை அடையாளம் கண்டு கொண்டதும் என்னிடம் வந்து விட்டான். மெதுவாகக் கம்பி நீட்டி விடுவானோ என்றுகூட நான் சந்தேகப்பட்டேன்......"

"அவனை ஏன் விட்டு விட்டாய்? என்னிடம் அழைத்து வந்திருக்கக் கூடாதா? இனிமேல் அவனை எங்கே போய்த் தேடிப் பிடிக்கிறது?" என்று கூறி ஜமீன்தார் வருத்தப்பட்டார்.

"மாமா, வருத்தப் படாதீர்கள். அவன் எங்கே இருக்கிறான் என்று எனக்குத் தெரியும். கான்பூரில் இருக்கிறானாம்."

"கான்பூரிலா! எந்தத் தெருவில்? அங்கே என்ன செய்து கொண்டிருக்கிறானாம்?"

"ஒரு வக்கீல் வீட்டில் வேலை பார்த்துக் கொண்டிருக்கிறானாம். மாதம் இருபது ரூபாய் சம்பளமாம்."

"என்ன! இருபது ரூபாய் சம்பளமா? ஏராளமான சொத்து அவனுக்கு இருக்க, இருபது ரூபாய்க்கு வேலை பார்க்கும்படி அவன் தலையில் எழுதி யிருக்கிறதே! கடவுளுடைய திருவிளையாட்டை என்னவென்று சொல்வது?" என்று ஒருவன் கூறினான்.

"இருபது ரூபாய் சம்பாதிக்கிறானா, நம் வீட்டிலே விறகுக்கே மாதம் இருபது ரூபாயாகிறதே......!"

"இருபது ரூபாயாகப் போவானேன்? அதை விட ஜாஸ்தி! எங்களுக்குத் தெரியாதா, என்ன?" என்றான் இன்னொருவன்.

"அது கிடக்கட்டும்; அவன் இப்பொழுது எப்படியிருக்கிறான், மனோஹர்?" என்று ஆத்திரத்துடன் விசாரித்தார் ஜமீன்தார்.

"லோனா செத்துப் போய் விட்டாளாம். பதின்மூன்று பதினாறு வயதுள்ள ஒரு பெண் அவனுக்கு இருக்கிறாளாம். இத்தனை நாளும் ரொம்பக் கஷ்டப் பட்டானாம். பிச்சை வாங்கிக்கூட வயிறு வளர்க்கும்படி ஆகிவிட்டதாம், மாமா!" என்றான் மனோஹர்.

"வீட்டை விட்டு ஓடி ஒருவன் சுகமாயிருக்க முடியுமா?" என்றார் ஜமீன்தார்.

"மாமா, அவன் வேண்டுமளவு கஷ்டப் பட்டு விட்டான் என்று தெரிகிறது. பாவம்! இனிமேலாவது கஷ்டப்படாமல் இருக்கட்டும். வீட்டுக்கு அழைத்து வந்து வைத்துக் கொள்ளுங்கள், மாமா!" என்றான் ஒருவன்.

"ஆமாம் மாமா, லோனாவும் செத்துத் தொலைந்து விட்டாள். உங்களுக்கும்தான் வயசாகி விட்டது. சொத்துக்கு உடையவன் ஒருவன் வேண்டாமா? பழையதை மறந்து அவனை வீட்டுக்கு அழைத்து வந்து விடுங்கள், மாமா!" என்றான் மற்றொருவன்.

"மனோஹர்! நீ என்னுடன் காலைக்குக் கான்பூருக்கு வருகிறாயா?" என்று கேட்டார் ஜமீன்தார்.

"சரி, வருகிறேன்; நான் லீவு எடுத்துக் கொண்டு வந்ததே உங்களுக்காகத்தான் மாமா!" என்றான் மனோஹர்.



"அப்படியா? ரொம்ப சந்தோஷ
மனோஹர்! கடவுள் உனக்கு எல்லா
மான சுகமும் கொடுப்பார்!—அவன் ஓ
போனதிலிருந்து என் மனம் பட்ட ப
கடவுளுக்குத்தான் தெரியும். அவனுடை
அம்மாவுக்கோ, அழுது அழுது கண்க
கெட்டுவிட்டன!" என்றார் ஜமீன்தார்.

"நியாயந்தானே மாமா! ஒரே பிள்
ளைப் பிரிந்திருக்க, பெற்ற ம
எப்படி இடம் கொடுக்கும்? பாவம், அ
கஷ்டத்தை நினைத்தாலே வருத்த
மிருக்கிறது! மாமியிடம் போய் இ
சமாசாரத்தைச் சொல்லிவிட்டு
கிறேன்" என்று எழுந்தான் மனோஹர்.



"சரி, போய்ச் சொல்லிவிட்டு வா! நாளைக் க் காலையில் நாம் புறப்பட்டு விடவேண் ம். ஞாபக மிருக்கட்டும்" என்றார் மீன்தார்.

"சரி" என்று கூறிவிட்டு மனோஹர் ள்ளே சென்றான். ஜமீன்தாரின் மனைவி ம் சந்துருவின் தாயுமான ஜமீன்தாரிணி ம்மாள் குத்து விளக்கடியில் உட்கார்ந்து, கையில் ஒரு ஜபமாலையுடன் ராமஸ்மரணை ய்து கொண்டிருந்தாள். மனோஹர் ள்ளே சென்றதும், "மாமி!" என்று ழைத்தான்.

"யார், அது?" என்று கேட்டாள், கண் ர்வை மங்கிய ஜமீன்தாரிணி அம்மாள்.

"நான் தான், மாமி!"

"என்ன, மனோஹரா!"

"ஆமாம், மாமி!"

"என்ன விசேஷம், அப்பா?"

"நல்ல செய்தி தான், மாமி! சந்துருவைப் பார்த்தேன்!"

"நிஜமாகவா, அல்லது பரிகாசம் செய்கிறாயா?"

"என்ன மாமி இது? எனக்குத் தெரியாதா? நான் இது மாதிரி — அதுவும் சந்துரு விஷயத்திலே பரிகாசம் செய்வேனா?"

ஜமீன்தாரிணியின் உள்ளத்தில் ஒரு மின்னல் வேகம் எழுந்தது. "பார்த்தாயா? நிஜமாகவா? எங்கே, கான்பூரிலா இருக்கிறான்?" என்று கேள்விகளை அடுக்கினாள்.

"ஆமாம்; கான்பூரில் ஒரு வக்கீல் வீட்டிலே இருக்கிறான். நாளைக்கு நானும் மாமாவும் அவனை அழைத்துக் கொண்டுவரப் போகிறோம்."

"அப்படியானால் நானும் வருகிறேன்!" என்றாள் ஜமீன்தாரிணி.

இந்தச் சமயத்தில், "நீ எதற்கு?" என்று கேட்டுக்கொண்டே உள்ளே நுழைந்தார் ஜமீன்தார்.

ஜமீன்தாரிணி, சேலை முகப்பை நன்கு முன்னுக்கு இழுத்து விட்டுக்கொண்டு, "உங்கள் பிடிவாதத்தினால்தானே அவன் ஓடினான்? நீங்கள் போனால் அவன் வரவே மாட்டான். அதனால்தான் நானும் வருகிறேன் என்கிறேன்!" என்றாள்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை, மாமி! அவன் வந்து விடுவான். பழைய விஷயங்கள் எல்லாம் யாருக்கு ஞாபக மிருக்கிறது?

எத்தனையோ நாட்களாகி விட்டன!" என்றான் மனோஹர்.

"எத்தனை நாள் ஆனால் என்ன? இவரைப் பார்த்து விட்டால், அவனுக்கு எல்லாம் ஞாபகம் வந்துவிடும்!" என்றாள் ஜமீன்தாரிணி.

"நான் போய் அவன் வராமல் இருந்து விடுவானா? நன்றாயிருக்கிறதே, நீ சொல்வது?" என்றார் ஜமீன்தார்.

"போதுமே, நீங்கள் போய் அவனிடம் இதுமாதிரிப் பேசினீர்களானால், அவன் வந்தாற் போலத்தான்! வேறெங்கேயாவது ஓடிப் போனாலும் ஓடிப் போய்விடுவான்!" என்றாள் ஜமீன்தாரிணி.

"அதெல்லாம் போகமாட்டான், மாமி! அவன் பட்ட கஷ்டம் அவனுக்கல்லவா தெரியும்! போன உடனே வந்துவிடுவான். அப்பா - அம்மாவுக்குக் கஷ்டத்தைக் கொடுத்துவிட்டு எவனாவது சுகமாயிருக்க முடியுமா? அதுமட்டுமில்லை; நானும் கூடப் போகிறேனே, நான் விட்டுவிடுவேனா?" என்றான் மனோஹர்.

"சரி, நீ சொல்கிறபடி கேட்கிறேன். அப்படியே எங்கேயாவது இரண்டொரு இடத்துக்குத் தீர்த்த யாத்திரை போய் விட்டு வரலாம் என்று நினைத்தேன்!" என்றாள் ஜமீன்தாரிணி.

"என் மாமா! மாமி சொல்கிறபடி செய்தால் என்ன?" என்று கேட்டான் மனோஹர்.

"அதற்கு இதுவா சமயம்? பிறகு எப்பொழுதாவது பார்த்துக் கொண்டால் போச்சு!" என்றார் ஜமீன்தார்.

"அவருக்குத் தன் காரியந்தான் அப்பா முக்கியம்! பிறத்தியார் இருந்தால் என்ன, செத்தால் என்ன?—அவருக்குக் கவலையே கிடையாது!" என்றாள் ஜமீன்தாரிணி.

ஜமீன்தார் சிறிது புன்முறுவலுடன், "செத்துக் கித்து தொலைந்து விடாதே! பின்னோடு வந்து தொலை!" என்றார்.

இதைக் கேட்டதும் ஜமீன்தாரிணியின் வதனம் மலர்ந்தது. அவள் ஜபமாலையை மூட்டை கட்டி வைத்துவிட்டு எழுந்தாள்.

"என் மாமி, உங்களுக்கு இந்தச் சந்தோஷ சமாசாரத்தைக் கொண்டு வந்தேனே, அதற்கு எனக்கு என்ன தரப் போகிறீர்கள்?" என்று கேட்டான் மனோஹர்.

"உனக்கில்லாததா? இன்று ராத்திரி நம் வீட்டிலே உனக்கு ஒரு நல்ல விருந்து. போதுமோ இல்லையோ?" என்று மகிழ்ச்சியுடன் கூறினாள் ஜமீன்தாரிணி.

## 10

ஜமீன்தாரிணி அன்றிரவு பூரா பிரயாணத்திற்கான ஏற்பாட்டைச் செ லாளள். தன் பேத்திக்காகவும் பின்னை காகவும் நல்ல நல்ல துணிமணிகளை பார்த்து எடுத்துப் பெட்டி ஒன்றில் அடு வைத்துக் கொண்டாள்.

பொழுது விடிந்ததும் எல்லாரும் பெ வண்டியில் ஏறிக்கொண்டு புறப்பட்டன மொத்தம் ஆறு பேர் அந்த வண்டியி இருந்தனர். ஜமீன்தார், ஜமீன்தாரி மனோஹர், சமையற்காரி, மற்று இரண்டு வேலைக்காரர்கள். அவர்களி ஒருவன். துப்பாக்கியையும் வெடிமருந் பெட்டியையும் தூக்கிக்கொண் வந்திருந்தான்.

அவர்கள் கான்பூருக்குச் சென்று ஒ சத்திரத்தில் தங்கினார்கள். சிறிது சி பரிகாரம் செய்துகொண்ட பின்ன மனோஹரைப் பார்த்து, "நந்துவி போவோமா?" என்று ஜமீன்தார் கேட்ட

"இப்பொழுது நீங்கள் வருவானேன் நான் போய் நந்துவைப் பார்த்துவி வருகிறேன். அப்புறம் நீங்கள் வரலாமே" என்றான் மனோஹர்.

"ஆமாம், நானும் அம்மாவும் வந்திரு பதைக் கேட்டு அவன் ஓடினாலும் ஓடி வான்! அதனால நாங்களும் இப்பொழு வருகிறோம்!"

"அவனாவது ஓடவாவது, மாமா! எசமா உத்தரவு இல்லாமல் அவன் ஓடிவி முடியுமா? நீங்கள் அதற்கெல்லாம் கவலை படாதீர்கள்; நான் அவனை இங்கே அழைத்து வந்துவிடுகிறேன்!" என்று கூ விட்டு மனோஹர் புறப்பட்டான்.

சிறிது நேரத்திற்கெல்லாம் வழி தெ விசாரித்துக் கொண்டே சென்று, ராமசா பாபுவின் வீட்டை அடைந்தான். வா தாவில் உட்கார்ந்திருந்த நந்து மனோ ஹரைப் பார்த்ததும் எழுந்து வந்து அ கனம் செய்துகொண்டு, "எப்பொழு வந்தாய்?" என்று வியப்புடன் கேட்டா

"இன்றைக்குத்தான் வந்தேன்!"

"இங்கே எப்படி வந்தாற்போலே?"

"உண்மையைச் சொல்லட்டுமா, பொ சொல்லட்டுமா?"

"பொய் எதற்கு? உண்மையை சொல்லு!"

"உன் அப்பாவும் அம்மாவும் வந்திரு கிறார்கள். அவர்கள் பின்னோடு நானு வந்திருக்கிறேன்!" என்றான் மனோஹர்.

"என்ன! அப்பாவும் அம்மாவும் வந்திருக்கிறார்களா? உன்னை யார் அவர்களிடம் என்னைப் பற்றிச் சொல்லச் சொன்னது?" என்று கடிந்து கொண்டான் சந்து.

"என்ன அப்பா செய்கிறது, என் மனசு கேட்கவில்லை! அதனால்தான்......"

"இப்பொழுது நான் என்ன செய்வது? பெரிய சங்கடத்தில் என்னை மாட்டி விட்டு விட்டாயே!"

"அதெல்லாம் ஒன்றும் இல்லை; என் பின்னோடு வா! உன்னைப் பார்க்கவேண்டுமென்று அவர்கள் துடியாய்த் துடித்துக் கொண்டிருக்கிறார்கள்!"

"இப்பொழுதேயா?"

"ஆமாம்; இப்பொழுதே!"

"என் மனம் துணிய மாட்டேன் என்கிறதே! அவர்களுக்குத் துக்கத்தை அளித்த நான், எப்படி அவர்களிடம் முகங் கொடுத்துப் பேசுவது! என்னால் வர முடியாதப்பா, மன்னித்து விடு!"

"என்ன அப்பா இது! பைத்தியம் மாதிரி பேசுகிறாய்? நீ வந்தால் அவர்கள் எவ்வளவு சந்தோஷப்படுவார்கள், தெரியுமா?"

"அது சரிதான்; இருந்தாலும் நான் அங்கே வர முடியாது!"

"அப்படியானால் அவர்களை இங்கே அழைத்து வரட்டுமா?"

"செய்; ஆனால் சந்து வரமாட்டேன் என்கிறான் என்று அவர்களிடம் சொல்லி வைக்காதே! ஏதாவது நினைத்துக் கொண்டுவிடப் போகிறார்கள். சந்து வீட்டில் இல்லை என்று அவர்களிடம் சொல்லி விடு!—என்ன?" என்றான் சந்து.

"சரி, நாளைக்கு நான் அவர்களை இங்கே அழைத்துக் கொண்டு வந்து விடுகிறேன்."

"சரி, இதே சமயத்துக்கு வந்து சேரு!"

"எங்கேயாவது ஓடி ஒளிந்து கொண்டு விடாதே!" என்று புன்முறுவலுடன் கூறி மனோகர் சந்துவிடம் விடை பெற்றுக் கொண்டு சென்றான். (தொடரும்)

---

# பாதகமில்லை!



மனைவி:—இந்தப் புடவை என்னத்துக்கு? சாயம் வெளுத்து விடும் போலிருக்கிறதே!

புருஷன்:—அதனால் பாதகமில்லை! வெளுக்கும் வரையில் உனக்கு ஆறு மாதம் புடவையாச்சு; பிற்பாடு எனக்கு ஆறு மாதம் வேஷ்டியாச்சு!

# கைதேர்ந்த வேலைக்காரருக் காக தயாரிக்கப்பட்டது




## ஆப்டிகல் பைன்ஸ்

சரியான மேல்பரப்பு மெருகுக் கும் அளவு தகுந்து வெட்டுவதற்கும் அஜாக்ஸ் ஆப்டிகல் பைன்ஸ் இன்றியமையாதவை. மூக்குக்கண்ணாடி வில்லைகளை தேய்த்து மழுமழுப்பாக்க அஜாக்ஸ் பைன்ஸ் உபயோகிக்கப்படுவது மட்டுமின்றி தோல், கல்லைக் கறைகளை பட்டுப்போனது மழுமழுப்பாக்கவும் உபயோகிக்கப்படுகின்றன.

**அஜாக்ஸ் ப்ராடக்ட்ஸ் லிமிடெட்,**
**106, அரண்மனைக்காரத்தெரு, சென்னை.**

மானேஜிங் ஏஜண்ட்ஸ்:
**மூருகப்பா & சன்ஸ், சென்னை.**

தென்னிந்தியாவுக்கு ஏகபோக விற்பனை ஏஜண்டுகள்:—
**மார்ஷல் ஸன்ஸ் & கம்பெனி (இந்தியா) லிமிடெட்,**
தபால் பெட்டி நெ. 141 சென்னை

# உத்தம நண்பர்கள்

சுந்தா

நேற்றிரவு அமெரிக்க நண்பர் ஒருவருடன் அளவளாவினேன். மாலையில்தான் அவரைத் தற்செயலாக 'நவீன நூல் நிலை'யத்தில் சந்தித்தேன். அவரை நான் சந்தித்தபோது யாரும் சம்பிரதாயமாய் "இவர்தான் இவர், அவர்தான் அவர்" என்று அசடு வழிய அறிமுகம் செய்து வைக்கவில்லை. நானே சகஜமாக அவருக்குக் கைலாகு கொடுத்தேன். அப்படியே கையோடு வீட்டுக்கு அழைத்து வந்தேன். வெளி நாட்டு மனிதராச்சே என்று நான் கொஞ்சமும் கூச்சப் படவில்லை. ஜமாவாகக் காலை நீட்டி உட்கார்ந்து, குஷியாக வெற்றிலை போட்டுக் கொண்டே, "சொல்லுங்கள், உங்கள் கதைகளை!" என்றேன். அவரும் ஆனந்தமாகச் சொல்ல ஆரம்பித்தார். அவர் சொன்ன கதைகளில், ஹாலிவுட் படங்களின் விறுவிறுப்பும், நியூயார்க் நகரின் கலகலப்பும், புது உலகத்துப் புதுமைகளும் காணப்பட்டன.

நேற்றுக் காலையில் பிரெஞ்சு நண்பர் ஒருவருடன் உறவாடினேன். அவர் ஒரு மந்திரவாதி; மாயாஜாலம் செய்து என் மனதை மயக்கி, பழைய காலத்துக் கற்பனை உலகம் ஒன்றில் உலாவும்படிச் செய்தார். அந்தக் கற்பனை உலகத்தில், கவசமணிந்த வீரர்கள், ஈட்டிகள் ஏந்திக் குதிரை சவாரி செய்தார்கள். எதற்கெடுத்தாலும் கத்திச் சண்டை போட்டார்கள். உயிரைத் திரணமாக மதித்தார்கள்; உதிரத்தைத் தண்ணீராகப் பாவித்தார்கள். கன்னி ஒருத்தியின் முத்தத்துக்காக கடும் யுத்தங்கள் செய்தார்கள்.

இந்தப் பிரெஞ்சு நண்பருக்கு விடை கொடுத்த பின்னர், ஆங்கிலேய நண்பர் ஒருவரை வரவேற்றேன். அவர், வானவில்லைப் பற்றியும் வானம்பாடியைப் பற்றியும் கவிதைகள் சொன்னார். இங்கிலீஷ் மங்கையரின் அழகையும் வர்ணித்தார். விண்மீன்களிடையே வார்த்தைக் கோலங்கள் போட்டுக் காட்டினார்.

எனது பிரிய பாரசீக நண்பரைச் சந்தித்து ஒரு வாரமாகிறது. ஆனாலும் அவர் பாடிய 'புல்புல்' பாட்டு, இப்போதும் என் ஞாபகத்தில் சுற்றிச் சுற்றி வந்து கொண்டே இருக்கிறது. அவர் வர்ணித்த வனரோஜா இப்போதும் மணம் வீசிக்கொண்டிருக்கிறது. அவர் என் இதயக் கிண்ணத்தில் வார்த்த இனிய தேன் இன்றைக்கும் களிவெறி ஊட்டிக் கொண்டிருக்கிறது.

அயல் நாடுகளில் இத்தனை நண்பர்கள் என்றால், சொந்த நாட்டில் எத்தனை நண்பர்கள் இருக்க மாட்டார்கள்!

சற்று முன்னால்தான் செந்தமிழ் நாட்டு நண்பர் ஒருவர் என்னை மகிழ்வித்துக் கொண்டிருந்தார். என் உள்ளத்தில் மறைந்திருந்த உணர்ச்சிகளை யெல்லாம் தட்டி எழுப்பினார். புது உணர்ச்சிகளை ஊட்டினார். அறியாத விஷயங்களை அறிவித்தார்; அறிந்த விஷயங்களைத் தெளிவுபடுத்தினார். அவர் சொன்ன வார்த்தைகள் ஒவ்வொன்றும் அவர் இதயத்திலிருந்து குதிபோட்டுக் கொண்டு வந்தது; என் இதயத்துக்குள் பாய்ந்து உதிரத்துடன் கலந்தது. அவர் பேசிய

## 'பீஸ்' எதற்கு?



வக்கீல்:—நீங்கள் பிளாக் மார்க்கெட்டின் அரிசி விற்கவில்லை யென்று வாதாடிக் கேஸை ஜெயித்து விடுகிறேன், பாருங்களேன்!

கடைக்காரர்:—வந்தனம்; அதற்காக எவ்வளவு பீஸ் கொடுக்க வேண்டும்?

வக்கீல்:—பீஸ் கீஸ் ஒன்றும் வேண்டாம்; ஒருவருக்கும் தெரியாமல் இரண்டு மூட்டை அரிசி அனுப்பி விடுங்கள்!

—டி. ஆர்.

போது, சில சமயங்களில் என்னைப் பெற்ற தாயே பேசியது போலிருந்தது.

சொந்த நாட்டினரும் வெளி நாட்டினருமாக இத்தனை நண்பர்கள் எனக்கு வாய்த்திருப்பது சாத்தியமா என்று சந்தேகப்பட மாட்டீர்கள் என்று நம்புகிறேன். ஏனெனில், நான் குறிப்பிடும் நண்பர்கள் எண்சாண் உடல் படைத்த மனிதர்களல்ல, ஓர் சாண் அளவுடைய புத்தகங்கள்தாம் என்பதை நீங்கள் இதற்குள் ஊகித்திருப்பீர்கள்.

புத்தகங்களுக்கு மனிதர்களைப்போலக் காலும் கையும் தலையும் இல்லைதான். ஆயினும் ஜீவன் இருக்கிறது; ஹிருதயம் இருக்கிறது.

உத்தம நண்பர்கள் என்று பாராட்டுவதற்கேற்ப உத்தம குணங்கள் படைத்தவராய் இருக்கிறார்கள் அவர்கள். பல விஷயங்களைத் தெரிவிக்கிறார்கள்; ஆனால் தெரிவித்த விஷயங்களில் கேள்வி கேட்க மாட்டார்கள். நீதி நெறிகளைப் போதிக்கிறார்கள்; ஆனால் சோதிக்க மாட்டார்கள். எதையும் புரியும்படியேதான் புகட்ட முயற்சிக்கிறார்கள்; ஆனால் ஏதேனும் புரியாமற் போனால், பரிகசித்துச் சிரிக்க மாட்டார்கள்.

உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேச மாட்டார்கள். நேரில் புகழ்ந்தும் மறைவில் இகழ்ந்தும் பேச மாட்டார்கள். நான் செய்யும் முயற்சிகளை என்னிடமிருந்தே அறிந்து அவற்றை நான் அறியாமல் தாங்களே கையாண்டு, நான் ஆசை வைத்த இலட்சியத்தை எனக்கு முன்னால் கைப்பற்றி, எனக்கு முட்டாள் பட்டம் கட்ட மாட்டார்கள். நான் லாபமோ பெருமையோ அடையும்போது பொறாமைப் பட மாட்டார்கள். நஷ்டமோ கஷ்டமோ அடையும்போது ஏளனம் செய்ய மாட்டார்கள்.

உன்னத கட்டுக் காரணமாய் என் இஷ்டப்படி, என் ஏவற்படி நடக்கத் தயாராயிருக்கிறார்கள். எந்த இடத்திலும் எந்த வேளையிலும் இவர்களை அழைக்கலாம். பேசச் சொன்னால் உற்சாகமாகப் பேசுவார்கள்; போதுமென்றால் வருத்தமின்றி நிறுத்திக் கொள்வார்கள்.

உத்தம நண்பர்களே! உங்கள் மூலம் உலகத்தை ஓரளவு அறிந்திருக்கிறேன். என்னையும் ஒருவாறு அறிந்திருக்கிறேன். கடவுளையுங் கூட உங்கள் மூலம் அறியலாம் என்று நீங்களே சொல்கிறீர்கள். ஆனால், நான் ஏனோ அறியவில்லை!



# திரட்டுப் பால்

எஸ். விஜயராகவன்

திரட்டுப் பால்; மிகவும் உயர்ந்த சுவையுள்ள தின்பண்டம்தான். ஆனால், என்னைப் பொறுத்த வரையில் அது எனக்கு வேம்பாகவே இருக்கிறது. அதைப் பற்றி நினைத்தாலே, என் மனக்கடலில் பிரளயத்திற்கும் மேலான கொந்தளிப்பு!

ரகுபதி எனது பால்ய நண்பன்; பணக்காரன். ஏழைக்கும் செல்வந்தனுக்கும் இடையே தோன்றும் நட்பு நீடிப்பது துர்லபம்தான். ஆனால் எங்களிருவரிடையே மிளிர்ந்த அன்பு ஏன் மாறுபாடு அடையவில்லை என்பது எனக்கே தெரியவில்லை.

ரகுவுக்குக் கொஞ்ச நாளாகவே உடம்பு சரியாயில்லை. செல்வத்தில் மிதந்து கொண்டிருந்த அவனுக்குப் பணக் கஷ்டம் என்றால் என்னவென்றே தெரியாது. அப்படியிருக்க, சிகிச்சைக் குறைவினாலோ, அல்லது பணவசதியின்மையினாலோ அவன் வியாதி அதிகமாகி இறந்துவிட மாட்டான் என்று எனக்குத் தெரியும். இரண்டு கைதேர்ந்த டாக்டர்கள் தினம் இரு முறை வந்து சிகிச்சை செய்தனர். இரண்டு 'நர்ஸு'கள் வேறு வருவதாக இருந்தார்கள். ஆனால் ரகுவின் மனைவி ஸ்வரூபிணி தேவி விட்டால்தானே? கூலிக்கு வேலை செய்யும் அவர்களைவிடத் தானே சிரத்தையாகப் பணிவிடை செய்வதுதான் நல்லது என்று நினைத்து, அவளே சகல பணிவிடைகளையும் செய்து வந்தாள்.

ரகுபதியின் வியாதியோ கொடூரமானது — க்ஷய ரோகம். நாளுக்கு நாள் தேக உஷ்ணம் அதிகமாகிக் கொண்டே வந்தது. பணத்தை வாரி இறைத்துச் சிகிச்சை செய்து கொண்டான். ஆனாலும் அது பயன் கொடுக்கும் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை. "அவனுடைய வாழ்க்கை நாடகத்தில் என்று திரை விழுந்து விடுமோ?" என்றே பயந்தனர் யாவரும்.

நான் நாள்தோறும் போய்த் தவறாமல் அவனைக் கவனித்து வந்தேன். ஏனெனில் அவனைக் கவனித்துக் கொள்ள அவனது மனைவி ஸ்வரூபாவைத் தவிர, வேறு ஒருவருமில்லை.

★

அன்று ரகு தனது படுக்கையில் உட்கார்ந்தபடி ஓயாமல் இருமிக் கொண்டிருந்தான். ஸ்வரூபா கையில் ஒரு கிண்ணம் திரட்டுப் பாலுடன் உள்ளே நுழைந்தாள்.

"என்ன ...?" என்று வினவினான் ரகு.

"பால் ..."

"அட, பகவானே! எனக்கா, பால்?"

"டாக்டர் பால்தான் நிறையக் கொடுக்க வேண்டுமென்று சொன்னார்."

"சற்று நேரம் நான் இருமலின்றி இருக்கவிட மாட்டாயா, ஸ்வரூபா? இப்போதுதான் மருந்து, பழ ரஸம் எல்லாம் சாப்பிட்டுவிட்டு இருமிக் கொண்டிருக்கிறேனே! — தொண்டையோ ரணமாகி விட்டது. மறுபடியும் 'பால் பால்!' என்று ஏன் என்னை வதைக்கிறாய்?" என்று அங்கலாய்த்தான் ரகு.

"கொஞ்சமாகத்தான் கொண்டு வந்திருக்கிறேன்!" என்றபடி, பால் கிண்ணத்தை அவனுக்கு முன்னால் வைத்தாள் ஸ்வரூபா.

ரகுபதி ஒரு வாய் குடித்து விட்டு, "போதும்!" என்று கீழே வைத்து விட்டான்.

"நல்ல பிடிவாதம்! இந்தச் சின்னக் கிண்ணத்தில் அரைக் கிண்ணம் கூடக் குடிக்கவில்லையே?" என்றபடி என் பக்கம் திரும்பி, "நீங்களே பாருங்கள்! இப்படி இவராகவே உடம்பைக் கெடுத்துக் கொள்கிறார்! இன்





னும் கொஞ்சம் சாப்பிடச் சொல்லுங்கள்!" என்றாள் ஸ்வரூபா.

நானும் சொல்லிப் பார்த்தேன்; அவன் மறுத்து விட்டான். அரைக் கிண்ணம் பால் மிஞ்சி விட்டது.

ஸ்வரூபா அதை எடுத்துக் கொண்டு அடுத்த அறைக்குள் நுழைந்தாள். எனக்கும் நாழிகையாகி விட்டதால் எழுந்திருந்தேன். ஸ்வரூபாவிடம் ஒரு விஷயம் சொல்லவேண்டியிருந்தது. அதாவது, ரகுவின் அன்றைய தேக உஷ்ணத்தை அவனிடம் சொல்ல வேண்டாமென்று டாக்டர் என்னிடம் சொல்லியிருந்தார். அதை ஸ்வரூபாவிடம் சொல்ல விரும்பி, அடுத்த அறைக்குள் நுழைந்தேன். அங்கே நான் கண்ட காட்சி என்னைத் திடுக்கிட வைத்தது. ரகுபதி குடித்து மிச்சமான பாலை ஸ்வரூபா குடித்துக் கொண்டிருந்தாள்!

"மன்னி! என்ன காரியம் செய்கிறாய்...?" என்றேன்.

"அதனால் என்ன......?" என்றாள் ஸ்வரூபா.

"கெடுதலில்லையா...? க்ஷயரோகம் பொல்லாத தொத்து வியாதி, தெரியுமா?"

"உண்மைதான்; ஆனால் அவர் இறந்து நான் மட்டும் உயிர் வாழ்வதில் ஏதேனும் பிரயோசனமுண்டா?"

இந்தக் கேள்விக்கு என்னால் பதில் சொல்ல முடியவில்லை; வீடு திரும்பினேன்.

★

நாளுக்கு நாள் ரகுபதியின் உடல் நிலை மோசமாகிக் கொண்டு வந்தது. ஆகவே அவன் உதக மண்டலம் சானிடோரியத்திற்குப் பிரயாணமானான். அவன் மனைவி ஸ்வரூபாவும் அவனைப் பின் தொடர்ந்தாள்.

அதற்குப் பிறகு ரகுவைப் பற்றிய விஷயங்கள் அதிகம் எனக்குத் தெரியவில்லை. முதலில் நாங்கள் இருவரும் கடிதப் போக்குவரத்து வைத்துக் கொண்டிருந்தோம்; நாளடைவில் அதுவும் நின்று விட்டது. ஆனால், அவனுடைய உடல் நிலை மட்டும் சற்றுக் குணமாயிற்று என்று எனக்குத் தெரிய வந்தது.

காலம் செல்லச் செல்ல எனக்கும் அவனைப் பற்றிய சிரத்தை குறைந்தது. மனித இயற்கைதானே!

ஒரு நாள் திடீரென்று ரகு, காஷ்மீர் முதலிய வடநாடுகளுக்குப் பிரயாணம் செய்யக் கிளம்பி விட்டான் என்றும், அப்படியே சீமைக்கும் போகப் போவதாகவும் யாரோ சொல்லக் கேட்டேன். அவன் ஏன் அங்கெல்லாம் போக வேண்டும்? — எனக்குத் தெரியாது. அவனிடம் பணமிருக்கிறது; ஏன் போகக் கூடாது?

நாட்கள் நடந்து, மாதங்கள் மறைந்து வருடங்கள் ஊர்ந்து சென்றன. காலச் சக்கரம் பன்னிரண்டு தடவை சுழன்று விட்டது. ரகுபதியும் காலப் போக்கில் என் மனதிலிருந்து அறவே மறைந்து விட்டான். இந்த நிலையில் திடீரென்று அவனிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது.

"அடுத்த செவ்வாய்க்கிழமை நான் சென்னையை அடைவேன். முடிந்தால் என்னை வந்து பார்க்கவும்" என்று அந்தக் கடிதத்தில் அவன் எழுதியிருந்தான்.

அடுத்த செவ்வாய்க் கிழமை யன்று, ஆபீஸ் வேலை முடிந்ததும் நேராக அவன் வீட்டை யடைந்தேன். எதிர்பாராத விதமாக வலிவுடனும் வனப்புடனும் விளங்கிய அவனைக் கண்டதும் எனக்கு ஒரே ஆச்சரியமாக இருந்தது.

"என்ன, நீ பூரண சொஸ்தமடைந்து விட்டாயா, இப்போது?" என்று கேட்டேன்.

"ஆம்" என்று பதிலளித்தான் ரகு.

பிறகு அவன் எப்படிக் குணமடைந்தான் என்பதைப் பற்றி விரிவாகச் சொன்னான்.

சற்று நேரத்திற்கெல்லாம் இருவரும் மாடியை அடைந்தோம். அடுத்த கணம் ரகுபதி உரத்த குரலில், "ஸ்வரூபா! ஸ்வரூபா! கொஞ்சம் காப்பியும் பட்சணமும் கொண்டு வா!" என்றான்.

ஸ்வரூபா கையில ஒரு தட்டுடன் உள்ளே நுழைந்தாள். அவளைப் பார்த்ததும் நான் திகைத்துப் போனேன். பத்து வருடங்களில் யாராவது இப்படி மாறிவிட முடியுமா என்ன, உருவத்தில்?

அவள், "நான் போய் காப்பி கொண்டு வருகிறேன்" என்றபடி, கையிலிருந்த பட்சணத் தட்டை எங்கள் முன்னால் வைத்துவிட்டு உள்ளே ஓடினாள்.

"ஸ்வரூபாவை அடையாளமே தெரிய வில்லையே!" என்றேன் நான்.

ரகுபதி என்னைச் சற்று உற்று நோக்கினான். "அவள் மாறித்தான் போய் விட்டாள்! ஆனால் உனக்குத் தெரிந்த ஸ்வரூபா வேறு; இவள் வேறு! அந்த ஸ்வரூபா இறந்து எத்தனையோ வருடங்களாகி விட்டன. அவளுக்கும் க்ஷயரோகம் வந்தது; ஆனால் தீரவில்லை!" என்று சொல்லிப் பெருமூச்சு விட்டான் ரகுபதி.

'க்ஷயரோகம்' என்றதும் என் உடம்பில் ஏதோ புல்லரித்தது போலிருந்தது. அன்று ரகுபதி குடித்து மிஞ்சிய பாலை அவள் குடித்த சம்பவம் என் மனக் கண்முன் வந்தது.

இருவரும் சற்று நேரம் மௌனமாயிருந்தோம். ரகுபதி பேசும் தொடர்ந்தான்:

"எனக்கு வேறு வழியில்லை. மறு விவாகம் செய்து கொண்டேன். முதலில் அதே பெயர் உள்ள இவளை அடைந்தேன்!" என்றான்.

இந்தச் சமயத்தில் ஸ்வரூபா கையில் காப்பியுடன் உள்ளே நுழைந்தாள். அதைக் கீழே வைத்துவிட்டு, அருகிலிருந்த பட்சணத் தட்டை எங்களிடம் நகர்த்தினாள்.

"இவ்வளவையும் என்னால் சாப்பிட முடியாது; கொஞ்சமாகக் கொடு!" என்றான் ரகு.

"அதென்னமோ, வரவர இவர் சரியாகவே சாப்பிடுவதில்லை. என்ன பிடிவாதம்!" என்றபடி, ஸ்வரூபா என் பக்கம் திரும்பி, "நீங்கள் சொல்லுங்கள்; இன்னும் கொஞ்சம் சாப்பிடட்டும்!" என்றாள்.

அவளைப் போலவே இரண்டாவது மனைவியும் அமைந்திருக்கிறாளே என்று நான் சந்தோஷமடைந்தேன்.

"ஸ்வரூபா, என் நண்பனுக்குத் திரட்டுப் பால் என்றால் மிகவும் பிடிக்கும்" என்றான் ரகு.

"அப்படியானால் இன்னும் கொஞ்சம் போடுகிறேன்" என்றபடி மறுபடியும் என் தட்டை நிரப்பினாள் ஸ்வரூபா. மிகுந்த சுவையுடன் இருந்த அந்தத் திரட்டுப் பாலைத் தின்றுவிட்டு எழுந்தேன். ரகுபதி மட்டும் பாதிக்கு மேல் மீதம் வைத்து விட்டான்.

சந்தோஷமாகச் சற்று நேரம் பேசிய பிறகு, வீட்டிற்குக் கிளம்பிய நான், ஸ்வரூபாவிடம் சொல்லிக் கொள்வதற்காகப் பின்புறம் திரும்பினேன்.

அப்போது ரகுபதி உண்டு எஞ்சிய திரட்டுப் பாலை வழித்துப் பூமியில் எறிந்து கொண்டிருந்தாள் ஸ்வரூபா! — என்ன நினைத்துக் கொண்டேனோ, எனக்கே தெரியவில்லை. அவளிடம் சொல்லிக் கொள்ளாமலேயே புறப்பட்டு விட்டேன்.

அப்பப்பா! என் இந்தப் பழைய ஞாபகங்கள் என் மனதை இப்படி வாட்டுகின்றன! எல்லாம் அந்தப் பாழாய்ப் போன திரட்டுப் பாலைப் பார்த்ததும்தான்!

## பெயர் எதற்கு?



திருடன் :— என்னப்பா போஸ்ட்மேன்! இன்றைக்கு ஏதாவது மணியார்டர் இருக்கா?

தபால்காரன் :— உன் பெயர் என்ன?

திருடன் :— என் பெயரைப் பற்றி உனக்கென்ன கவலை? மணியார்டர் ஏதாச்சும் இருக்கா, சொல்லு!

# தற்கால ஹாஸ்யம்

**பூர்வாங்கம்தான்!**

"காங்கிரஸ் சர்க்கார் ஏற்பட்டால் அரிசி ரேஷனை எடுத்து விடுவோம் என்று தேர்தலின்போது பிரசாரம் செய்தார்களே, இப்பொழுது எட்டு அவுன்ஸாகக் குறைத்து விட்டார்களே?"

"இப்பொழுது எட்டு அவுன்ஸாக்கியது அரிசி ரேஷனை எடுப்பதற்குப் பூர்வாங்கம் தான்! இன்னும் கொஞ்ச நாளில் அவர்கள் சொன்னபடியே, அரிசி ரேஷனை இந்த எட்டு அவுன்ஸ்கூட இல்லாமல் எடுத்து விடுவார்கள்!"

—எஸ். வி.

★

**ரொம்ப ரொம்பப் பொருத்தம்!**

"பிரதம மந்திரி பிரகாசம்காரு ஸ்ரீ கூர்மய்யாவை ஏன் விளம்பர மந்திரியாகப் போட்டிருக்கிறார்? அவர் என்ன விளம்பரம் செய்து கொண்டிருக்கிறார்?"



"தம்முடைய மந்திரி சபை ஆமை வேகத்தில் வேலை செய்கிறது என்பதைக் காட்டுவதற்காகத் தான் ஸ்ரீ கூர்மய்யாவை விளம்பர மந்திரியாகப் போட்டார் பிரகாசம். அதைத்தான் கூர்மய்யா நன்றாக விளம்பரம் செய்து கொண்டிருக்கிறார்!"—எஸ். வைத்தியநாதன்.

★

**நின்ற காரணம்!**

அம்மாமி:—அவாள் வீட்டுக் கலியாணம் ஏன் நின்று விட்டதாம்?

சிநேகித:— காலை டிபனுக்கு அரிசி இட்லி செய்வதாகச் சொன்னபடி பெண் வீட்டார் செய்யவில்லையாம்! அதனால்தான்!

★

**பேஷ்!**

"சொற்ப சம்பள உத்தியோகஸ்தர்களின் சம்பளத்தை உயர்த்துவது பற்றி ஆலோசிக்க ஏற்பாடான கமிட்டி என்னவாயிற்று?"

"அந்தக் கமிட்டி மெம்பர்கள் தங்கள் சம்பளம் உயர வேண்டும் என்று வேலை நிறுத்தம் செய்திருக்கிறார்களாம்!"

—ஏ. சத்யமூர்த்தி.

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk, Madras.

# PHYNAZOL




*The Ideal*
## SOLID DISINFECTANT

பினைசால் - வீடுகள், ஆஸ்பத்திரிகள், காரியாலயங்கள், தொழிற்சாலைகள், சினிமா தியேட்டர்கள், சிற்றுண்டிச் சாலைகள் முதலிய இடங்களுக்கு மிகவும் இன்றியமையாதது.

கிருமிகள், பூச்சிகள், ஈக்கள், கரப்பு முதலியவற்றை அறவே ஒழிக்கவல்லது. மற்றெவ்வித கிருமி நாசன திராவகத்தைக் காட்டிலும் ஐம்பது பங்கு வீரியமும், அடக்க சக்தியும் வாய்ந்தது. சுலபமாக ஓரிடத்திலிருந்து கொண்டுபோக மிகவும் சுலபமானது. தண்ணீரில் எளிதாகக் கரைவதுடன் இனிய மணமும் உள்ளது,

½ பவு. ரூ. 1-12-0. 1 பவு. 3-4-0
5 பவு. ரூ. 15-8-0. 10 பவு. 30-8-0
50 பவு. பவுண்டு ரூ. 3 வீதம்
உலோக டின்களில் கிடைக்கும்.

D. D. T. டின் ஒன்றுக்கு ரூ. 2/8 வீதம்
8 அவுன்ஸ் டின்களில் கிடைக்கும்

பினைசால் பெங்களூர் பப்ளிக் ஹெல்த் இன்ஸ்டிடியூட் பெக்டீரியோலோஜிகல் டிபார்ட்மெண்டாரால் பரிசோதிக்கப்பட்டு பூரண திருப்திக்கு உத்தரவாதம் அளிக்கப்பட்டுள்ளது.

R. W. Co. திறமை 5 இலிருந்து 6 வீதமும் நிரந்தர எமல்ஷனும் கூடியது.

பூரா விவரங்களுக்கு:

**The INDIA WATERPROOFING & DYEING WORKS**
60/2, DHARAMTALA STREET, CALCUTTA
PHONE: CAL. 448 GRAM. TEXOLQUIN

டிஸ்ட்ரிப்யூட்டர்கள் : மைசூர், கூர்க்குக்கு
மெஸர்ஸ். ரதுலால் & கோ., மைசூர்

மலபார், கொச்சி, திருவாங்கூர், கோயமுத்தூர்
வைநாடு, நீலகிரி ஜில்லாக்களுக்கு
மெஸர்ஸ். டி. ஸ்டேன்ஸ் & கோ., லிமிடெட்,
கோயமுத்தூர்

# வெஜிடபில் கதம்ப ஊறுகாய்




வெள்ளரிக்காய், இஞ்சி, பாவக்காய்
கீரைத்தண்டு, வாழைத் தண்டு, கத்
ரிக்காய், பச்சை மிளகாய், பச்சை
மிளகு — சொல்லும்போதே வாயி
ஜலம் ஊறுகிறது — முதலியவை
சேர்த்து கைபடாமல் ஜிஞ்ஞாமிரு
மாகத் தயாரிக்கப்பட்டது. வாய்க்
வெகு ஜோர் உடம்பிற்கு பரம சுக
இன்றே உங்கள் தேவைக்கு எழுதவு
இரு சைஸ்களில் கிடைக்கும்.

●

தயாரிப்பவர்கள் :

## டி. எஸ். ஆர். & கோ
வாஸனை திரவிய வியாபாரிகள்
கும்பகோணம்

மதராஸ் விநி ஏஜெண்டுகள் :
மெஸர்ஸ். புஷ்பவனம் ஸ்டோர்
பைகிராப்ட்ஸ்ரோடு, திருவல்லிக்கே

கோயமுத்தூருக்கும் பாலக்காடுக்கும்
சோல் ஏஜண்டு :
B. பாலபட்டாபி,
வைசியாள் தெரு, கோயமுத்தூர்

